# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஏப்ரல்—1983 சித்திரை





ஸ்ரீராமநவமி சிறப்பிதழ்

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

*ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.*

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதைக் குறிக்கிறது.*

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


தொலைபேசி :
71231



*விவரங்களுக்கு:*
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

## வாசகருக்கு ஒரு முக்கியச் செய்தி

**விஜயத்தின் சந்தா விவரம் 1983 மார்ச் முதல் மாறுதல் செய்யப்பட்டுள்ளது. இது பற்றிய விளக்கம் இந்த இதழில் 136, 141 பக்கங்களில் வெளிவந்திருப்பதைக் கவனிக்கவும்.**

# *Sundarakandam*

**of**

**SRIMAD VALMIKI RAMAYANA**

(Original Sanskrit with English translation by
Swami Tapasyananda)

Crown quarto about 280 pages

**Pre-publication Price Rs. 25/- plus Rs. 6/- postage.**

**Post-publication Price Rs. 40/- plus Rs. 6/- postage.**

While Valmiki's Ramayana is justly famous as a great epic and scriptural text, the fifth Canto of it known as **Sundarakanda** is specially noted for its many sided excellences. The theme it deals with is Hanuman's search for Sita and his discovery of her in Lanka. Besides its literary beauty, its spiritual implications are profound. Pious Hindus consider it a *Mantra-sastra*, and daily recital of it forms a regular feature of the devotional practice of many of them. It is hoped that those who do not know Sanskrit sufficiently will find this new English translation alongwith the original in Sanskrit, a welcome addition to their collection of scriptural texts.

The proposed edition will be a *de luxe* one running to about 280 pages in crown quarto priced at Rs. 40/- It is expected to be released by the end of this year. We have great pleasure in offering a Pre-publication concession rate of **Rs. 25/- per book.** This offer is valid till **May 31st, 1983.**

The money may be sent by M. O. or draft/cheque in favour of



**SRI RAMAKRISHNA MATH**
16, Ramakrishna Math Road,
MYLAPORE, MADRAS-600 004

## சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 50,000 முதல் 50,208 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஏப்ரல் மாதத்துடன் முடிவடைகிறது. மேற்கொண்டு பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15ஐ ஏப்ரல் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 60,000 முதல் 60,344 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை மே மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 70,001 முதல் 71,508 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜூன் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 80,001 முதல் 80,292 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜூலை மாதத்துடன் முடிவடைகிறது.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாவே செலுத்துவதனால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ள விரும்பும் ஆண்டுச் சந்தாதாரர்கள், தாங்கள் செலுத்தியுள்ள ரூ. 15 போக மீதி ரூ. 135—யைச் செலுத்தி ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளலாம். தொகையை மொத்த மாகவோ, பகுதி பகுதியாகவோ ஒரு வருடத்தில் செலுத்தலாம். ஆயுள் சந்தாதாரராகச் சேருவது பத்திரிகையின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவி செய்வதாகும்.

நிர்வாகி,
**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்**

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | ஏப்ரல்—1983 | இதழ் 4

பொருளடக்கம்



# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1983 ஏப்ரல் மாத நிகழ்ச்சிகள்

**விசேஷ தினங்கள்:**

1-4-83 வெள்ளிக்கிழமை சுவாமி யோகானந்த ஜயந்தி

3-4-83 ஞாயிறு ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய ஜயந்தி பொதுக் கூட்டம்
மாலை 5-30 மணிக்கு பேசுபவர்: சுவாமி பீதாம்பரானந்தர்

19-4-83 செவ்வாய் ஸ்ரீராமாநுஜ ஜயந்தி

21-4-83 வியாழன் ஸ்ரீராமநவமி

24-4-83 ஞாயிறு ஸ்ரீராமநவமி பொதுக் கூட்டம்
மாலை 5 மணிக்கு தலைவர்: சுவாமி தன்மயானந்தர்
பேசுபவர்: ஆர். கோதண்டராமன்

ஏப்ரல் 9 & 23 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராம நாம சங்கிர்த்தனம் நடைபெறும்.

**சத் சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை

1. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—வி.ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (ஏப்ரல் 10)
2. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—வி.எஸ்.வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (ஏப்ரல் 17)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி பீதாம்பரானந்தர் 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற தலைப்பில் ஏப்ரல் 10 & 17 ஆகிய ஞாயிற்றுக்கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

**வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-30 மணிக்கு)**

1. திங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்—சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் வைராக்கிய சதகம்—சுவாமி பிரசாந்தானந்தர்
3. புதன் ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர்
4. வியாழன் பகவத்கீதை—பிரம்மசாரி சின்மய சைதன்யா
5. வெள்ளி துளசி ராமாயணம்—சுவாமி வீதபயானந்தர்
6. சனி அத்யாத்ம ராமாயணம்—பி. ராமகிருஷ்ணன் (ஏப்ரல் 2 மட்டும்)

**வேறு சில நிகழ்ச்சிகள்:**

ஏப்ரல் 3 & 17 தேதிகளில் காலை 9-30 மணிக்கு, சுவாமி ராகவேசானந்தர் 'தியானம்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்துவார். இடம்: 10, ராஜம்மாள் தெரு, லட்சுமிபுரம், ஷெனாய் நகர், சென்னை-600 010.

ஏப்ரல் 9-ஆம் தேதி மாலை 5 மணிக்கு, சுவாமி ராகவேசானந்தர் 'பகவத்கீதை' என்ற தலைப்பில் உரை நிகழ்த்துவார். இடம்: 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம், சென்னை-600 010.

ஏப்ரல் 17-ஆம் தேதி காலை 9-30 மணிக்கு, வி. ராமமூர்த்தி 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் உரையாற்றுவார். இடம்; 28, காமராஜர் நகர், திருவான்மியூர், சென்னை-600 041.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்

தொலைபேசி: 71231 **ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.

—திருமூலர்

| தொகுதி 63 | ருத்ரோத்காரி ௵ சித்திரை ௴ | இதழ் 4 |
|---|---|---|


## பிரார்த்தனை

द्विषड्भुजं षण्मुखमम्बिकासुतं कुमारमादित्यसहस्रतेजसम् ।
वन्दे मयूरासनमग्निसंभवं सेनान्यमद्याहमभीष्टसिद्धये ॥

த்விஷட்புஜம் ஷண்முகம் அம்பிகாஸுதம்
குமார-மாதித்ய-ஸஹஸ்ர-தேஜஸம் ।
வந்தே மயூராஸநமக்நி-ஸம்பவம்
ஸேநாந்ய-மத்யாஹ-மபீஷ்டஸித்தயே ॥

ஆறுமுகமும், பன்னிரு தோளும், கோடி சூரியப் பிரகாசமும், மயில் வாகனமும் கொண்டு, அக்கினியில் தோன்றி, அம்பிகையின் புதல்வராக விளங்கும் தேவசேனாபதியான குமரக்கடவுளை இப்பொழுது நான் எல்லாச் செயல்களும் நிறைவேறுவதற்காக வணங்குகிறேன்.

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழும்
கண்ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே நன்னிதியே! ஞான
நடத்தரசே! என்னுரிமை நாயகனே! என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம்
வம்மின் உலகியலீர்!
மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாம் கண்டீர்,
புனைந்துரையேன் பொய்புகலேன்,
சத்தியம் சொல்கின்றேன்!
பொற்சபையில் சிற்சபையில்
புகுந்தருணம் இதுவே.



—வடலூர் வள்ளலார்



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** யசோதையும் பிருந்தாவனத்துக் கோபிகைகளும் தங்களது முற்பிறவியில் அருவக் கடவுளை வணங்குபவர்களாக இருந்திருக்க வேண்டும் என்று சிலர் கூறுகின்றனர். அவர்களுக்கு அவ்விதம் ஞானயோக சாதனை புரிந்ததில் மகிழ்ச்சியும் மனநிறைவும் உண்டாகவில்லை. ஆகவே, பிருந்தாவன விளையாட்டில் கிருஷ்ணனுடன் ஆடிப் பாடி ஆனந்தம் அடைந்தனர். ஒரு நாள் கிருஷ்ணன் அவர்களிடம், ''உங்களுக்கு என்னுடைய என்றும் நிலையான கோலோகத்தைக் காண்பிக்கிறேன். யமுனையில் இறங்குங்கள்'' என்றான். அதற்கிணங்க அவர்கள் தண்ணீரில் இறங்கி மூழ்கியதும் கோலோகத்தின் தரிசனம் பெற்றனர். அதை அடுத்துப் பார்க்கும் இடம் எங்கும் அவர்கள் அகண்ட ஜோதி தரிசனத்தையே கண்டார்கள். அதைக் கண்டு யசோதை, ''கிருஷ்ணா! நான் இவற்றைப் பார்க்க விரும்பவில்லை. இப்போது நான் பார்க்க விரும்புவதெல்லாம் உன் மனித வடிவத்தைத்தான். உன்னை இடுப்பில் வைத்துக்கொண்டு உணவு ஊட்டுகிறேன், வா'' என்றாள்.

அவதார புருஷர்களிடம் கடவுளின் சக்தி மிகவும் அதிகமாக வெளிப்படுகிறது. அவதார புருஷர்கள் உயிரோடு இருக்கும்போதே அவர்களை வணங்கி வழிபட்டு அவர்களுக்குத் தொண்டு புரிய வேண்டும். பொழுது புலர்ந்ததும் அவர் தமது வீட்டின் ரகசிய அறைக்குள் சென்று மறைந்துவிடுகிறார். அவதார புருஷரை எல்லோரும் அறிந்துகொள்ள முடியாது. உடல் எடுத்தாலே நோய், துக்கம், பசி, தாகம் முதலியவை வருகின்றன. இவற்றை அவதார புருஷர்களிடம் காணும்போது சாதாரண மக்களுக்கு அவர்களும் நம்மைப் போன்ற சாதாரண மனிதர்தாமே என்ற எண்ணம் வந்துவிடுகிறது. ராமர் சீதையைப் பிரிந்த சோகத்தால் அழுதார். பஞ்ச பூதங்களாகிய உடலில் சிக்கிக்கொண்டு பிரம்மம் அழுகிறது.

ஒரு நாள் கோபிகைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தபோது கிருஷ்ணன் திடீரென்று மறைந்தான். அது காரணமாக, கோபிகள் துன்பக் கடலில் ஆழ்ந்தார்கள். ஒரு மரத்தைப் பார்த்து, ''நீ தவம் செய்யும் ஒரு முனிவன். நீ நிச்சயமாகக் கிருஷ்ணனைப் பார்த்திருக்கிறாய். இல்லாவிட்டால் இது போன்று ஆடாமல் அசையாமல் சமாதியில் எப்படி உன்னால் இருக்க முடியும்?'' என்றார்கள். புல்தரையைப் பார்த்து, ''ஏ பூமியே! நீ கண்டிப்பாகக் கிருஷ்ணனின் காட்சியைப் பெற்றிருக்கிறாய். இல்லாவிட்டால் இவ்விதம் நீ மயிர்க்கூச்சம் பெற்றிருப்பதற்குக் காரணம் என்ன? கண்டிப்பாக நீ அவனால் தீண்டப்பட்டு அந்த ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறாய்'' என்றார்கள். பிறகு மல்லிகைக் கொடியைப் பார்த்து, ''ஏ மல்லிகைக்கொடியே! எங்கள் மாதவனைத் திருப்பிக் கொடு''



என்றனர். இப்படிக் கோபியர்கள் அன்பினால் பித்துப் பிடித்தவர்கள் போல் பிதற்றினார்கள்.

**செவ்வாய்க்கிழமை, டிசம்பர் 18, 1883**

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** தேவேந்திரநாத் மிகவும் நல்லவர்தாம். ஆனால் சுக தேவரைப் போல் சிறுவயதிலிருந்தே இல்லறத்தில் சிக்காமல், இரவும் பகலும் இறைவனைப் பற்றிச் சிந்தனை செய்கிற புனிதமான இளந்துறவிகள் கொடுத்து வைத்தவர்கள்!

இல்லறத்தில் இருப்பவர்களுக்கு எப்போதும் மனதின் ஒரு மூலையில் ஏதாவது ஒரு பற்று இருந்துகொண்டே இருக்கும். அப்போதைக்கப்போது நல்ல பக்தியும் அவர்களிடம் தென்படும்.

ஒரு சமயம் மதுர்பாபு வழக்கு ஒன்றில் ஈடுபட்டிருந்தார். அப்போது ஒரு நாள் அவர் காளி கோவிலில் அம்பிகையின் அருகில் வந்து நின்றுகொண்டு, ''பாபா! இந்தப் பூவை அன்னை காளிக்கு அர்ப்பணம் செய்யுங்கள்'' என்றார். அவ்விதமே நான் மலரை அர்ப்பித்தேன். அவர் ஒரு காரணத்தோடுதான் அதை வைக்கச் சொன்னார். ஆனாலும், மதுர பாபுவுக்கு எவ்வளவு ஆழமான நம்பிக்கை பார்த்தாயா? நான் மலரை அன்னைக்கு அர்ப்பணித்தாலே போதும். அது அவருக்கு வெற்றியை உண்டாக்கி விடும் என்று நம்பினார்.

ரதியின் தாயாருக்குத்தான் எவ்வளவு பக்தி! முன்பெல்லாம் அவள் அடிக்கடி இங்கு வருவாள். எனக்கு எவ்வளவு தொண்டுகள் செய்திருக்கிறாள்! அவள் ஒரு வைணவ பக்தை. ஒரு நாள் நான் அன்னை காளிக்குப் படைத்த பிரசாதத்தை உண்பதைப் பார்த்தாள். பிறகு இங்கு வருவதையே நிறுத்திவிட்டாள். அவள் பக்தி ஒருதலைப்பட்டது! மனிதனை எடுத்த எடுப்பில் நம்மால் புரிந்துகொள்ள முடிவதில்லை.

பிரேமைபக்தி முதிரும்பொழுது சமாதி, பாவம் முதலியன உண்டாகின்றன.

ஒரு முறை கமார்ப்புகூருக்கு அருகில் உள்ள சியாம் பஜாரில் நட்வர் கோசுவாமி வீட்டில் கீர்த்தனம் நடந்து கொண்டிருந்தது. அங்கே கிருஷ்ணனின் தரிசனமும் கோபிகைகளின் தரிசனமும் எனக்குக் கிடைத்தன. உடனே சமாதி அடைந்தேன். என்னுடைய சூட்சும தேகம் எப்போதும் கிருஷ்ணனின் காலைச் சுற்றிச் சுற்றி வருவது போலத் தோன்றியது.

கல்கத்தாவில் ஒரு ஹரி சபையில் இது போன்ற கீர்த்தனம் ஒரு சமயம் நடந்துகொண்டிருந்தது. அப்போதும் சமாதி ஏற்பட்டு வெளியுணர்வை இழந்தேன். சமாதி மிகத் தீவிரமடைந்து விட்டது. அன்று நான் உடலை விட்டு விடுவேனோ என்று எல்லோரும் பயந்து விட்டனர்.

* * *

குருதேவர் ராக்காலின் நன்மைக்காக இளநீரும் சர்க்கரையும் ஸித்தேச்வரி தேவிக்குப் படைப்பதாக வேண்டிக் கொண்டார். ம-விடம், ''இதற்கான செலவைக் கொடுக்க முடியுமா?'' என்று கேட்டார்.

மாலையில் ம-, ராக்கால் முதலியோருடன் குருதேவர் வண்டியில் டான்டானியாவில் உள்ள ஸித்தேச்வரி காளி கோவிலுக்குப் புறப்பட்டார். போகும் வழியில் இளநீர், சர்க்கரை வாங்கிக் கொண்டார். கோயிலை அடைந்ததும் இளநீரைச் சீவி அதில் சர்க்கரை போட்டுக் காளிதேவிக்குப் படைக்கும்படி ஒரு பக்தரிடம் கூறினார்.

கோயிலை அடைந்தபோது, கோயில் அர்ச்சகர்கள் தமது நண்பர்களுடன் அன்னை காளியின் அருகில் அமர்ந்து சீட்டாடுவதைக் குருதேவர் கண்டார். எனவே அவர் உடன் வந்த பக்தர்களிடம், ''பார்த்தீர்களா? இப்படிப்பட்ட இடங்களில் சீட்டு விளையாடுகின்றனர். இங்கு இறைவனைப்பற்றி நினைக்க வேண்டும்! அதை விட்டுச் சீட்டு விளையாடுகிறார்களே!'' என்று கூறி வருந்தினார்.

குருதேவர் அங்கிருந்து புறப்பட்டு யது மல்லிக்கின் வீட்டிற்குச் சென்றார்.



# இராமாயணம்

## ராமரது எளிமை

திருமுருக கிருபானந்தவாரியார்

ராமசந்திரமூர்த்தி இளமையில் ஓர் ஏழை மகனுடன் விளையாடிக்கொண்டிருந்தார். அவன் பேர் ஸ்ரீநிவாசன்.

"அடேய் சீனு!" என்று ராமர் அழைப்பார்.

''அடே ராமா!'' என்று அவன் அழைப்பான்.

குழந்தைப் பருவத்தில் அரசன் மகனும் ஆண்டி மகனும் ஒன்றுதானே!

ராமர் வசிட்ட முனிவரிடம் கலை பயின்று தாடகை வதம் புரிந்து, சீதை கல்யாணம் முடிந்தபின்பு கானகம் சென்றார்.

ஏழைமகன் ஸ்ரீநிவாசன் அயலூர் சென்று அலைந்து திரிந்து அயோத்தியை அடைந்தான்.

''எங்கே என் நண்பன்? ராமர் எங்கே?'' என்று வினவினான்.

ராமர் கானகம் சென்றார் என்று ஸ்ரீநிவாசன் உணர்ந்தான், அழுதான். ''அந்தோ ராமா! நீ கானகம் சென்றனையா? உனக்கு யார் துணை? மழை, வெயில், பனி முதலியவற்றால் நீ துன்புறுவாயே. நான் வந்து உனக்குத் துணை செய்வேன்'' என்று தனக்குள் கூறிக் கொண்டான்.

காட்டையடைந்தான். ''ராமா! ராமா!'' என்று கூவியழைத்தபடி பித்தனைப் போல் அலைந்தான், உலைந்தான்.

காடெல்லாம் தேடினான்; நாடினான்; ஓடினான்; எம்பெருமான் சென்ற கானகத்தை அவனால் அறிய இயலவில்லை.

பதினான்கு ஆண்டுகள் உருண்டு ஓடி மறைந்தன. ஏழைமகன் அயோத்தியை அடைந்தான். அன்றுதான் முடிசூட்டு விழா.

மகுடாபிஷேகம் நிகழ்ந்தது. வேதியர் வேத கீதமும், மாதர்கள் மங்கல நாதமும் முழக்கினார்கள். முனிவர் மந்திராட்சதை தெளித்தார்கள். ஒரே கோலாகலம். மன்னர் குழாங்கள் கை கூப்பி வணங்கி நின்றன.

அங்கே வந்தான் ஏழை ஸ்ரீநிவாசன். காவற்காரனை நோக்கி, ''அடே! ராமன் வந்துவிட்டானா?'' என்று கேட்டான்.

''ஆம் வந்துவிட்டார். மகுடாபிஷேகம் நடக்கிறது'' என்றான் காவற்காரன்.

அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. தனக்கே மகுடாபிஷேகம் ஆகிறாற் போல் உள்ளம் கிளுகிளுத்தது.

ஒரே ஓட்டமாகத் துள்ளி ஓடினான். ரத்தின சிங்காசனத்தில் வீற்றிருந்த சக்கரவர்த்தி திருமகனைக் கண்டான். இளமையில் அழைத்த நாப் பழக்கம். ''அடே ராமா! காட்டுக்குச் சென்றாயே! எப்படா வந்தாய்?'' என்றான்.

இந்தச் சொற்கள் அந்த அரச அவையைக் குலுங்க வைத்தன. சபையில் ஒரு பெரிய பரபரப்பு உண்டாயிற்று.

லட்சுமணரின் கண் சிவந்தது. 'இவன் தலையைத் தள்ளுவேன்' என்று அவர் எடுத்தார் வில்லை.

பரத சத்துருக்கினர் சீற்றமுற்றார்கள். அனுமான் வாலை எடுத்தார்; ''இவனைக் கட்டி ஏழு கடலுக்கும் அப்பால் எறி

தேவைகள் குறைந்தால் தெய்வத்தன்மை பெருகும். —சாக்ரடீஸ்

வேன்'' என்ருர். வசிட்ட முனிவர், ''ரகுநாதனுக்கு நான்தான் பேரிட்டேன்; எனினும் நானே ராமா என்று அழைப்பதில்லை. 'ராகவேந்திரா! ராமசந்திரா!' என்றுதானே அழைக்கிறேன். இந்த மூடன் அடே ராமா என்று அழைத்தானே, இவனை விட்டு வைக்கலாமா?'' என்று சினந்து தருப்பைக் கட்டை எடுத்து ஓங்கினுர். ஆ! ஆ! என்ற ஒலி எங்கும் எழுந்தது.



ஸ்ரீராமர் பளிச்சென்று எழுந்து ஓடினுர். 'அவர் முதலில் அடிக்கட்டும்; பின்னர் எல்லோரும் சேர்ந்து அடிப்போம்; இவன் வாயைக் கிழிப்போம்' என்று எண்ணினுர்கள் மற்றவர்கள்.

ஸ்ரீராமர் ஓடி அவனை மார்புடன் தழுவி, ''அன்பனே! நேற்றுத்தான் வந்தேன். உன்னைக் காண வேண்டும் என்று துடித்தேன். நல்ல காலத்துக்கு நீ வந்துவிட்டாய்; மிக்க மகிழ்ச்சி. வருக, வருக'' என்று கூறி அழைத்துப் போய் அரியணை மீது தம்முடன் அமர்த்திக்கொண்டார். சபையில் பரபரப்பும் அதிசயமும் ஏற்பட்டன.

ராமர் சபையோர்களைக் கருணையுடன் பார்த்துக் கூறுவார்—''குருநாதா! தம்பி பரதா! லட்சுமணு! சத்துருக்கினு! ஆஞ்சநேயா! மன்னர்களே! எனக்குப் பதினுன்கு ஆண்டுகளாக ஒரு தீராத கவலை இருந்தது. அது இன்றுதான் தீர்ந்தது. சித்திரகூட பருவதத்தின் அருகில், மந்தாகினி நதிக் கரையில் நான் தங்கியிருந்தபோது தம்பி பரதன் வந்து தந்தையார் பொன்னுலகம் புகுந்தார் என்று சொன்னுன்.

''என் அருமைத் தந்தையார் எனக்கு முடிசூட்டி மகிழ விரும்பினுர். இந்த முடிசூட்டு விழாவில் தந்தையார் இருந்து சிந்தை மகிழ்வதற்கு இல்லையே என்று எண்ணி எண்ணி வருந்தினேன். எல்லோரும் என்னை 'ராகவேந்திரா! ரகுநாதா!' என்றெல்லாம் அழைப்பார்கள். அப்பா ஒருவர்தாம் 'அடே ராமா!' என்று அன்பு கனிய அழைப்பார். எனவே என் மனக் கவலை மாற 'அடே ராமா!' என்று அன்பு கனிய அழைத்த இவர் என் பிதா ஆவர். தந்தையார் இந்த வடிவில் வந்து அழைத்து என் மனக் கவலையை மாற்றிவிட்டார்'' என்று அன்புக் கண்ணீர் சிந்திக் கூறினுர்.

இதைக் கேட்ட அத்தனை பேரும் ராமருடைய கருணையின் எளிமையை எண்ணி அதிசயித்தார்கள். தசரதர் என்று எண்ணி அந்த ஏழையை இறைஞ்சினுர்கள். ★

## உபதேசித்தது யார் ?

மறைவாகச் சொல்லிக் காட்டாமலே கொடுத்தல், வீடு தேடி வந்தவர்களை உபசரித்தல், பிறருக்கு வேண்டியதைச் செய்துவிட்டு அதை வெளியே சொல்லிக்கொள்ளாதிருத்தல், பிறர் செய்த நன்மையை எல்லோருக்கும் தெரிவித்தல், செல்வத்தைக் கொண்டு கர்வமடையாமை, பிறரை இகழாதிருத்தல்—இத்தகைய கத்தி போன்ற கடுமையான விரதங்களெல்லாம் நல்லோருக்கு யாரால் உபதேசிக்கப்பட்டனவோ?

—பர்த்ருஹரி

# சிவந்தது ஏன்?

## கி. வா. ஜகந்நாதன்

இறைவனுடைய திருக்கரத்திலுள்ள செந்தீயைப் பற்றிச் சொன்ன காரைக்கால் அம்மையாருக்கு அதன் நினைவு பின்னும் எழுகிறது. அதைப் பற்றி மீண்டும் சிந்திக்கிறார். இறைவன் திருக்கரத்தில் உள்ள அழல் கொழுந்து விட்டு எரிந்து ஆடுகிறது. அதை ஏந்திய சிவபிரானுடைய உள்ளங்கை சிவப்பாக இருக்கிறது. அவனுடைய திருமேனியே செம்பவள வண்ணமுடையதுதானே?

இறைவனது உள்ளங்கை சிவந்திருக்கிறதே! ஏன்? ஒருகால் தழலை ஏந்துவதனால் அந்தத் திருக்கரம் சிவந்துவிட்டதோ?—இவ்வாறு அவருடைய உள்ளத்தில் எண்ணம் எழுகிறது.

இறைவன் கரம் தீயினால் சிவக்குமா? அவனே தீவண்ணன்தானே? அந்தப் பெரிய தீயை இந்தச் சிறிய தீ என்ன செய்யும்? அவன் தன் கையில் அனல் ஏந்துவது மட்டுமா? அவன் தீயிலேயே நின்று நடனம் புரிகிறவன் ஆயிற்றே!



அவன் கையில் அனல் ஏந்தி மயானத்தில் தீயில் ஆடுகிறான். அவன் காலில் கழல் ஒலிக்கிறது. அங்கே உள்ள பேய்களெல்லாம் அந்த நடனத்தைக் கண்டு களிக்கின்றன. அவனோடு சேர்ந்து அவையும் கூத்தாடுகின்றன.

இந்தப் பேயாட்டத்தைப் பேய் வடிவம் கொண்ட காரைக்கால் அம்மையாரும் கண்டு களித்திருக்கிறார். ஆகவே அந்த மயானக் கூத்தனை விளித்துச் சொல்கிறார்:

> கழல் ஆடப்
> பேயோடு கானில்
> பிறங்க அனல் ஏந்தித்
> தீ ஆடுவாய்!

அந்தப் பெருமானைப் பார்த்து ஒரு வினாவை எழுப்புகிறார். 'நான் விடுக்கும் இந்த வினாவுக்கு விடை கூறு' என்கிறார்.

**இதனைச் செப்பு.**

'அழலினால் உன்னுடைய உள்ளங்கை சிவந்ததோ?' என்று முதலில் வினவுகிறார்.

**அழல் ஆட அங்கை சிவந்ததோ ?**

தீயே தன் வடிவமாக இருக்கும் இறைவனுக்கு இந்தத் தீ எம்மாத்திரம்? அவன் தீயிலேயே நடனமாடுகிறானே! அந்தத் தீயினால் அவனுக்கு வெப்பம் உண்டானால் அவனால் ஆட முடியுமா? பெருந் தீயாகிய அவனுக்கு அது குளிர்ந்துதான் இருக்கும். நீரில் ஆடுவது போலத் தீயில் ஆடும் அவனுக்கு அவன் கையில் எடுத்த தீயானது சுடுமா? அதன் வெம்மையில் உள்ளங்கை சிவக்குமா?

தீயும் செந்நிறம் உடையதுதான். அவன் திருக்கரமும் செம்மையுடையது. தீயின் சிவப்பு அவன் உள்ளங்கையில் சிவப்பை உண்டாக்கியது என்று சொல்வது பொருத்தம் இல்லையானால், அந்த உள்ளங்கைச் சிவப்பே அதில் ஏந்தும் தீக்குச் செந்நிறத்தை உண்டாக்கியதோ?

இறைவனுடைய அழகான அங்கையின் செம்மைதான் அந்த அழலில் ஏறியிருக்க வேண்டும்.

**அங்கை**
**அழகால் அழல்சிவந்த வாறே?**

இப்படி வினுக்களை எழுப்பிய அம்மையார் இறைவனையே, 'எது உண்மை என்பதைச் சொல் அப்பா!' என்று கேட்கிறூர்.

**அழல்ஆட அங்கை சிவந்ததோ? அங்கை**
**அழகால் அழல்சிவந்த வாறே?—கழல்ஆடப்**
**பேயோடு கானில் பிறங்க அனல்ஏந்தித்**
**தீஆடு வாய், இதனைச் செப்பு.**

காலில் கட்டிய வீர கண்டை ஆடி ஒலிக்க, சுடுகாட்டில் பேயோடு உன் கோலம் நன்ருக விளங்கும்படி தழலை ஏந்திக்கொண்டு, தீயில் நடனம் புரியும் எம்பெருமானே, உன்னுடைய உள்ளங்கை அதில் ஏந்தியிருக்கும் தீயானது ஆடி எரிய அதனுல் சிவந்ததோ? அன்றி உன்னுடைய உள்ளங்கையின் அழகிய செவ்வண்ணத்தால் அந்த அழல் சிவந்தபடியோ? இந்த விஞவுக்கு உரிய விடையை நீ சொல்லியருள்வாயாக.

[அழல்—இறைவன் திருக்கரத்தில் ஏந்தியிருக்கும் அக்கினி. அங்கை—உள்ளங்கை. அழகால்—அழகிய செவ்வண்ணத்தால். சிவந்தவாறே—சிவந்தபடியோ? அழல் சிவந்தவாறு அங்கை அழகாலோ என்று ஓகாரத்தைப் பிரித்துக் கூட்டிப் பொருள் செய்வதும் பொருந்தும். கழல்—திருவடியில் அணிந்த வீர கண்டை. கான்—சுடுகாடு. பிறங்க—திருக்கோலம் விளங்கும்படி. தீயில் ஆடுவாய். இதனை—இந்தக் கேள்விக்கு உரிய விடையை.]

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 98-ஆவது பாட்டு. ★

**சுவாமி விவேகானந்தர் பிறந்த இடம்**



கல்கத்தாவில் சுவாமி விவேகானந்தர் பிறந்த வீடு.

**சுவாமி விவேகானந்தர் மறைந்த இடம்**



பேலூர், ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் சுவாமி விவேகானந்தரின் அறை. இங்கேதான் சுவாமிஜி தம் உடலை உகுத்து மகாசமாதி எய்தினர்.

# மன அலைகளின் ஆற்றல்

ஆர். நிவேதிதா

**க்ஷேத்திரங்கள்**

தூய எண்ணம் கொண்ட பக்தர்களின் பிரார்த்தனைகளாலும் ஆன்மிகச் சிந்தனைகளாலும் காசி மாநகரம் முழுமையும் தெய்விகம் உறைந்திருக்கிறது என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கருதினார். நீராவி உறைந்து பனிக்கட்டி ஆவது போலத் தெய்விகமே வாராணசி எனப்படும் காசி க்ஷேத்திரத்தில் உறைந்திருக்கிறது என்ற ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்து, பெருமளவிற்கோ சிறிதளவிற்கோ நம்மால் புனிதத் தலங்களாக மதிக்கப்பெறும் எல்லாத் தலங்களுக்கும் பொருந்தும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் பிருந்தாவனத்தின் ஆன்மிகச்சூழலையும் பெரிதும் பாராட்டிக் கூறியுள்ளார்.

ஹிந்துக்களின் கோவில்களில் கோபுரம், விதானம், மண்டபம் ஆகியவை அமைக்கப்பெற்றிருக்கும். அவ்விதம் அமைக்கப்பெற்றிருப்பதற்குத் தெளிவான காரணம் உண்டு. அதாவது இது போன்ற இடங்களில் கோவிலுக்கு வரும் மக்களிடமிருந்து வெளிப்படும் தெய்விக எண்ணங்கள் சூட்சும வடிவத்தில் சென்று தங்குகின்றன. இதே ரீதியில் அமைந்த அருமையமான எண்ணங்கள் அங்கே ஏராளமாகச் சேர்வது காரணமாக, தெய்விகம் அங்கு அதிகமாகவும் அழுத்தமாகவும் ஆகிவிடுகிறது. அந்த ரீதியில் அங்கே செல்லும் மக்கள் தங்கள் மனநிலைக்கு ஏற்ற தெய்விக எண்ணங்களுடன் தொடர்பு கொள்கிறார்கள். தங்கள் மனம் உயர்ந்த நிலைக்கு உயர்த்தப்படுவதையும் உணர்கிறார்கள்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்—''கடவுளை அடையும்பொருட்டுப் பல்லாயிரக் கணக்கான மக்கள் நெடுநாட்களாக ஜபம், தவம், தியானம், பிரார்த்தனை, வந்தனை வழி



ஸ்ரீராமகிருஷ்ணர் காசிக்கு யாத்திரை சென்றபோது சிவபெருமானை ஒரு ஞானக்காட்சியில் தரிசித்த நிகழ்ச்சி.

பாடுகள் செய்து வரும் இடங்களில் தெய்வ சாந்நித்தியம் இருக்கும் என்பதைத் தெரிந்துகொள். அவர்களுடைய பக்தியினால் ஆன்மிக எண்ணங்கள் உருவடைந்துள்ளன போல அந்த இடங்கள் இருக்கின்றன. ஆதலால் அப்படிப்பட்ட இடங்களில் ஒருவனுக்கு ஆன்மிக அறிவு எளிதில் உண்டாகி ஈசுவர தரிசனம் கிடைக்கிறது.

''புராதன காலம் தொடங்கி, எண்ணற்ற துறவிகளும் பக்தர்களும் இந்தத் தீர்த்தங்களுக்கு வந்து, ஈசுவர தரிசனம் வேண்டும் என்று, ஆசைகளையெல்லாம் விட்டு, உள்ளன்போடு கதறியிருக்கிறார்கள். ஆதலால் ஈசுவரன் எங்கும் இருக்கிறான் என்றாலும், இத்தகைய க்ஷேத்திரங்களில் விசேஷமாகத் தன்னைத் தோற்றுவிக்கிறான். உதாரணமாக, பூமியில் தோண்டினால் எங்கேயும் தண்ணீர் காணப்படும். குளம், கிணறு, ஏரி ஆகியவை இருக்கும் இடத்தில் தோண்ட வேண்டிய அவசியமில்லை. அங்கே எப்போது வேண்டுமானாலும் தண்ணீர் எடுத்துக் குடிக்கலாம்.''

**கோவிலுக்குச் செல்லும்போது**

நாம் கோவிலுக்குச் செல்லும்போது அங்கே நடைபெறும் சிறப்பு வழிபாட்டில் கருத்துச் செலுத்த வேண்டும்; உயர்ந்த தெய்விக எண்ணங்களைச் சிந்திக்க வேண்டும்; வீண் வார்த்தைகள் பேசக்கூடாது; லௌகிக பந்தங்களில் சிக்க வைக்கும் கருத்துக்களைத் தவிர்க்க வேண்டும் என்பது முதியோர் கருத்தாகும்.

மன அமைதியின்றித் தவிக்கும் ஒருவன் தெய்விகம் நிறைந்த கோவிலுக்குச் செல்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அங்கே சூட்சுமமாக இருக்கும் தெய்விகச் சிந்தனைகளின் தாக்குதல் காரணமாக அவன் மனதில் சாந்தி ஏற்படுகிறது. அமைதியின்றித் தவித்த நிலையில் அவன் மனம், உயர்ந்த சிந்தனைகளுடன் தொடர்பு கொண்டு அமைதி தரும் கருத்துக்களைக் கிரகிக்கிறது.

**மனம் போல் வாழ்வு**

மக்கள் பிறக்கிறார்கள், வாழ்கிறார்கள், இறக்கிறார்கள். ஆனால் அவர்கள் இறந்தாலும் அவர்கள் வாழ்ந்தபோது எண்ணிய எண்ணங்கள் இறப்பதில்லை. அதாவது மனிதன் சாகிறானே தவிர, அவனது எண்ணங்கள் சாவதில்லை. அவை சூட்சுமமாக ஆகாய வெளியில் என்றென்றைக்குமாக மிதந்துகொண்டே இருக்கின்றன. வானொலியில் நாம் விரும்பிய அலைவரிசையில் முள்ளைத் திருப்பி அங்கே ஒலிபரப்பப்படுவதைக் கேட்கிறோம். அதுபோலவே வான மண்டலத்தில் மிதந்தபடியே இருக்கும் எல்லா விதமான எண்ண அலைகளில், நாம் எதற்கு நம்மைத் தகுதியுள்ளவர்களாக வைத்திருக்கிறோமோ அதைக் கிரகிக்கிறோம்.

இதனால்தான் நம் முன்னோர், ''எப்படி நினைக்கிறாயோ அப்படியே நீ ஆகிறாய். உன் சிந்தனைகளை நீ உயர்த்திக் கொள்ளும் அளவிற்கு நீ வாழ்க்கையில் உயர்கிறாய்'' என்று கூறுகிறார்கள். 'நம்முடைய எண்ணப்படியே நாம் ஆகிறோம்' என்பது ஆன்றோர் வாக்கு.

மனம்தான் மனிதன். எனவே பந்தத்திற்கும் மோட்சத்திற்கும் மனமே காரணமாக அமைகிறது.

**நினைவில் கொள்வோம்**

மன அலைகளின் ஆற்றலைக் குறித்துச் சிந்திக்கும் இந்தச் சமயத்தில், சுவாமி விவேகானந்தரின் பின்வரும் கருத்துக்களை நாம் இங்கே நினைவில் கொள்ளலாம்—

**என்ன பயன்?**

மனமே! பல வகையான பாவங்களால் புழு முதல் பல விதமான உடல்களை அடைந்தேன். அந்தப் பிறவிகளில் நீயும் அந்த உடல்களில் பகுத்தறிவற்று இருந்தாய். ஆனால் இப்போது ஏதோ நற்செய்கையின் பயனாய் மனித உடல் கிட்டியுள்ளது. இந்த உடலிலும் நீ முன்பு போலவே பகுத்தறிவற்று இருந்தாயானால், மனித உடலைப் பெற்று என்ன பயன், சொல்?

—மாநஸோத்போதனம்



''உன்னுடைய ஒவ்வொரு சொல்லும் சிந்தனையும் செயலும் அதற்கு ஏற்ற பலனைத் தரும் வகையில் உன் மனதில் இடம் பெறும் என்பதை எப்போதும் நீ நினைவில் வைக்க வேண்டும். உனது தீய எண்ணங்களும் செயல்களும் புலிகளைப் போல் உன்மீது பாய்வதற்குத் தயாராக இருக்கின்றன. அதைப் போலவே உன் நல்ல எண்ணங்களும் செயல்களும் ஒரு நூறுயிரம் தேவதைகளின் ஆற்றலுடன் உன்னை எப்போதும் நிரந்தரமாகப் பாது காப்பதற்குத் தயாராக இருக்கின்றன. இதை நீ எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும்.

''நாம் நினைக்கும் ஒவ்வோர் எண்ணமும், நாம் செய்யும் ஒவ்வொரு காரியமும், குறிப்பிட்ட ஒரு காலத்திற்குப் பிறகு சூட்சுமத்தன்மையை அடைகிறது. பிறகு அது வித்து வடிவத்தைப் பெற்று வாழ்கிறது. மீண்டும் சிறிது காலத் திற்குப் பிறகு அது வெளிப்பட்டு வந்து தனக்கு உரிய பலன்களைத் தருகிறது. இந்தப் பலன்களே மனிதனது வாழ்க் கையை நிர்ணயிக்கின்றன. இவ்விதம் மனிதன் தனது வாழ்க்கையைத் தானே உருவாக்கிக்கொள்கிறுன். தனக்குத் தானே அமைத்துக்கொள்ளும் விதிகளைத் தவிர வேறு எதற்கும் மனிதன் கட்டுப் பட்டவன் அல்ல.

''தொடர்ந்து புனிதமான எண்ணங் களையே சிந்தித்தபடி நன்மையைச் செய்துகொண்டிரு. தீய சம்ஸ்காரங் களைத் தலைகாட்டாதபடி அழுத்தி வைப் பதற்கு அது ஒன்றே ஒன்றுதான் வழி.

''பகை, பொறுமை ஆகியவற்றை நீ வெளியிட்டால், அவை வட்டியும் முத லுமாக மீண்டும் உன்னிடமே திரும்பி வந்து சேர்ந்துவிடும். வேறு எந்தச் சக்தி யாலும் அவற்றைத் தடுத்து நிறுத்த முடியாது. ஒரு முறை நீ அவற்றை இயங்கச் செய்துவிட்டால் அதனுல் வரும் விளைவையும் ஏற்றே ஆகவேண்டும். இதை நீ நினைவில் வைத்துக்கொண்டால், தீய செயல்களைச் செய்வதிலிருந்து அது உன்னைத் தடுத்து நிறுத்தும்.''

[முற்றும்]

## அலெக்சாண்டர் பதில்



''உன்னைவிடப் பணமும் பெயரும் படையும் அதிகமுள்ள அரசர்களால் ஒன்றும் முடியாமலிருக்க, நீ மாத்திரம் எவ்விதம் கீழே யிருந்து மேற்கு வரையிலுமுள்ள நாடுகளை ஜயித்தாய்?'' என்று அலெக் சாண்டரைக் கேட்டதற்கு, அவர் சொன்னதாவது:—

''கடவுள் கிருபையால் எந்த நாட்டை வென்றுலும் நான் மக்களைத் துன்புறுத்துவதில்லை. அவர்களை ஆண்டுகொண்டிருந்த அரசர் களையும் தூஷிப்பதில்லை.

''பெரியோர்களைத் தூஷிக்கிறவன் சிறந்தவனுக மாட்டான்.

''நாடும் ஆட்சியும், சண்டையும் வெற்றியும், சட்டமும் ஆணையும் கைவிட்டு மாறிவிட்டால் பயனற்றவையே.

''உன் பெயர் பழுதடையாமல் இருக்க, இறந்துபோனவர் களின் பெயரைத் தூற்றுதே.''

—ஸா அதி




## விதுர நீதி

திரட்டும் தமிழும்: நம்பி

கர்வி, மூடன், கோபி, ஆலோசனை செய்யாமல் காரியங்களைச் செய்பவன், தர்மத்தை விலக்கினவன் ஆகியோருடன் நட்பு வைத்துக்கொள்ளக் கூடாது.

நன்றியுள்ளவன், தர்மம் செய்பவன், சத்தியசீலன், அற்பத்தனம் இல்லாதவன், உறுதியான பக்தியுடையவன், புலனடக்கமுள்ளவன் இத்தகையவனிடம் அறிஞன் நட்புக் கொள்ள வேண்டும்.

துக்கத்தால் பீடிக்கப்பட்டவன், மதம் கொண்டவன், நாத்திகன், சோம்பேறி, அடக்கமில்லாதவன், ஊக்கம் இல்லாதவன் ஆகியவர்களிடத்தில் செல்வம் நிலைப்பதில்லை.

தவசிகளுக்குத் தவம் பலம். பிரம்ம ஞானிகளுக்குப் பிரம்மம் பலம். தீயோருக்குத் துன்பம் செய்தல் பலம். குணசாலிகளுக்குப் பொறுமை பலம்.

நீர், கிழங்கு, பழம், பால், அவி, சான்றோனுடைய அனுமதி, குருவின் வார்த்தை, மருந்து ஆகிய எட்டும் விரதத்தைக் கெடுக்கமாட்டா.

கோபத்தைக் கோபியாமல் இருப்பதன் மூலம் ஜயிக்க வேண்டும். தீயவனை நல்லொழுக்கத்தால் ஜயிக்க வேண்டும். லோபியைத் தானத்தால் வெல்ல வேண்டும். பொய்யைச் சத்தியத்தால் வெல்ல வேண்டும்.

அடக்கம், பணிவு, வணக்கம் இவற்றை வழக்கமாகக் கொண்டு பெரியோரை அடுத்து வாழ்பவனுக்குப் புகழ், ஆயுள், கீர்த்தி, பலம் இவை அதிகரிக்கின்றன.

அதிகத் துயரினால், தருமத்தை மீறுவதனால், எதிரியை வணங்குவதனால் கிடைக்கும் பொருளை விரும்பலாகாது.

பயிற்சி இல்லாமை வேதத்துக்குக் களங்கம். விரதம் இல்லாமை பிராமணனுக்குக் களங்கம். வேளாண்மை செய்யாத ஜனங்கள் பூமிக்குக் களங்கம். மனிதனுக்குப் பொய் களங்கம். கற்புள்ள மகளிருக்கு அரிய பொருள்களின்மீது ஆசை களங்கம்.

தானத்தால் நண்பனையும், போரால் பகைவரையும், உண்டி முதலியவற்றால் மனைவியையும் வென்றவனுடைய வாழ்க்கை பயனுள்ள வாழ்க்கை.

கெட்ட வழியில் பொருள் சம்பாதித்து, நல்ல வழியில் அதை ஒருவன் செலவு செய்வானாயின் அந்த நல்ல செயல்களுக்கு உரிய பலன் மறுமையில் அவனுக்குக் கிட்டாது.

முயற்சி, புலனடக்கம், திறமை, கவனமாக இருத்தல், ஊக்கம், ஞாபகசக்தி, நன்கு ஆலோசித்துத் தொடங்குதல்— இவை செல்வத்துக்குக் காரணமாக அமைகின்றன.






# பக்த ராமதாசர்

ஆர். ஸ்ரீநிவாசன்

பத்திராசலம் என்ற ஊரில் வாழ்ந்தவர் ராமதாசர். இவரது இயற் பெயர் கோபன்ன.

ஹைதராபாத் மன்னனுக இருந்த தானீஷாவின் ஆட்சியின் கீழ்த் தாசில்தாராகக் கோபன்ன பணியாற்றி வந்தார்.

கோபன்ன வாழ்ந்த காலத்தில் பத்திராசலத்தில் இருந்த ராமர் கோயில் மிகவும் மோசமான நிலையில் இருந்தது. இதைக் கண்டு கோபன்ன மிகவும் மனம் வருந்திஞர். ஆகவே அவர் மக்களிடமிருந்து வசூல் செய்த வரிப்பணம் ஆறு லட்சம் வராகன்களைச் செலவழித்து அந்த ராமர் கோயிலை அழகாகக் கட்டிக் கும்பாபிஷேகம் செய்தார். இதைக் கண்ட அந்த ஊர் மக்கள் அவரது ராமபக்தியைப் பெரிதும் பாராட்டிஞர்கள்.

வரிப்பணத்தைத் தனக்கு உரிய காலத்தில் அனுப்பாததுடன் அதைக் கொண்டு கோபன்ன கோயிலும் கட்டிவிட்டார் என்ற செய்தி தானீஷா விற்குத் தெரிய வந்தது. ஆதலால் கடுங் கோபம் கொண்ட மன்னன் தானீஷா கோபன்னவைக் கைது செய்து கொண்டு வரும்படி வீரர்களை அனுப்பிஞன். அதன்படி கோபன்ன கைதியாக அரசவைக்குக் கொண்டு வரப்பட்டார். பணத்தைத் திருப்பித் தரும்வரை கோபன்ன சிறையில் இருக்க வேண்டும் என்று மன்னன் தீர்ப்பு வழங்கிஞன். கோபன்ன சிறையில் அடைக்கப்பட்டார்.

சிறையில் கோபன்ன மிகவும் துன்பப்பட்டார். அவருக்கு உணவாக வெறும் உப்பும் அரிசியுமே கொடுக்கப்பட்டன. கசையடி தண்டனைக்கும் அவரை உட்படுத்திஞர்கள். மக்கள் அனைவரும் கோபன்ன படும் துயரம் கண்டு மனம் கலங்கிஞர்கள். இவ்விதம் பல ஆண்டுகள் உருண்டோடின.

ஒரு நாள் துன்பம் தாங்க முடியாமல் கோபன்ன விஷம் குடித்துத் தற்கொலை செய்துகொள்ளத் தீர்மானித்தார். விஷம் குடிப்பதற்கு முன்பு இறைவனை நினைத்துத் தியானம் செய்தார்.

கோபன்னவின் நிலையைக் கண்டு சீதாபிராட்டியின் மனம் உருகியது. அவள் ராமபிரானிடம் கோபன்னவுக்காகப் பரிந்து பேசிஞள். "கோபன்ன தங்கள் சிறந்த பக்தன். அவனைத் தாங்கள் இவ்விதம் கஷ்டப்படுத் தலாமா?" என்று கேட்டாள்.

அதற்கு ராமர் சீதையிடம், "கோபன்ன தன் சிறிய வயதில் ஒரு கிளி யைப் பிடித்துக் கூண்டில் பன்னிரண்டு ஆண்டுகள் அடைத்து வைத்தான். அதனுல்தான் அவனுக்கு இந்தத் துன்பம் வந்திருக்கிறது. இப்போது அவன் தன் பாவத்திற்கு உரிய பிராயச்சித்தம் செய்துவிட்டான். எனவே இன்றிரவே அவனை விடுதலை செய்யப்போகிறேன். மன்னன் தானீஷாவை நேரில் சந்தித்து, கோபன்ன தர வேண்டிய ஆறு லட்சம் வராகனையும்

தந்துவிடுவேன். அதைத் தொடர்ந்து கோபன்னுவையும் விடுதலை செய்து விடுவார்கள்'' என்றார்.

அதற்குச் சீதாதேவி, ''பகவானே! கோபன்னு நம் பக்தன். அந்தப் பக்தனைப் போய்ப் பார்க்காமல் மன்னனை முதலில் போய்ப் பார்க்கிறீர்களே. இது என்ன நியாயம்?'' என்று வினவினாள்.

சீதையின் கேள்விக்கு, ''தானீஷாவும் முற்பிறவியில் சிறந்த பக்தனாக இருந்தான். அவன் ஆயிரம் குடங்கள் நீர் அபிஷேகம் செய்வதாக வேண்டிக்கொண்டு 999 குடங்கள் வரை அபிஷேகம் செய்தான். முடிவில் பொறுமையிழந்து கடைசிக் குடத்தை இறைவன் விக்கிரகத்தின்மீதே போட்டு உடைத்துவிட்டான். அதனால்தான் அவனுக்கு இறைவனின் திருவருள் போன பிறவியில் கிடைக்காமல் போயிற்று. இந்தப் பிறவியில் நான் அவனுக்குக் காட்சி தரப்போகிறேன்'' என்று ராமர் கூறினார்.

அதன் பின் ராமரும் லட்சுமணனும் மாறுவேடத்தில் சென்று மன்னனிடம் பணத்தைக் கொடுத்தனர்.

அவர்களைப் பார்த்து மன்னன், ''நீங்கள் யார்?'' என்று வினவினான்.

அதற்கு அவர்கள், ''எங்கள் பெயர் ராமன்ஜி, லட்சுமணன்ஜி. நாங்கள் இருவரும் கோபன்னுவுக்காகப் பணம் செலுத்த வந்திருக்கிறோம்'' என்றனர்.

மன்னனிடம் பணம் கொடுத்ததற்கு ராமரும் லட்சுமணனும் ரசீது வாங்கிக்கொண்டனர்.

பிறகு அவர்கள் அந்த ரசீதைக் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் இருந்த கோபன்னுவின் பக்கத்தில் வைத்துவிட்டு மறைந்துவிட்டனர்.

இறைவனே தன் பக்தன் கோபன்னுவுக்காக மாறுவேடத்தில் வந்ததை மன்னன் உணர்ந்துகொண்டான். அவன் கோபன்னுவின் பக்தியை உணர்ந்து, தன் பிழைக்காகப் பெரிதும் மனம் வருந்தினான். கோபன்னுவை உடனே விடுதலை செய்தான்.

கோபன்னு இறைவனின் கருணையை நினைந்து மெய்சிலிர்த்தார். ''ஹே ராமா! எனக்காக நீயே நேரில் வந்தாயா?'' என்று அழுதார். அதுமுதல் தமது பெயரை ராமதாசர் என்று மாற்றிக்கொண்டு தமது கடைசிக் காலம்வரை ராமனுக்கே தொண்டு செய்தார்.

எத்தகைய துன்பம் நேர்ந்தாலும் மனம் தளராத பக்தி வேண்டும், பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யக்கூடாது என்ற நீதிகளையும், பக்தியின் பெருமையையும் இந்தக் கதையின் மூலம் நாம் உணர்கிறோம்.



ராமநாமம் எழுதுவதற்கும், ராமபூஜைக்கும், ராம நாம கீர்த்தனத்திற்கும் எவ்விதமான பேதமும் இல்லை. ராமசந்திர மூர்த்தியே ராமநாம வடிவத்தில் இருப்ப தாகப் பாவித்துக்கொள்ள வேண்டும். —காஞ்சிப் பெரியவர்




பிரம்மசாரி முத்துக்குமார்

**மூன்று நிலை**

சைவ சித்தாந்தம் பரம் பொருளை அருவம், அருவுருவம், உருவம் என்ற மூன்று நிலைகளில் குறிப்பிடுகிறது. இறைவனின் இந்த மூன்று தத்துவங்களும் முறையே சிவன், சதாசிவன், மகேசன் என்று வழங்கப்பெறுகின்றன. இந்த மூன்று தத்துவங்களையும் நிஷ்களம், சகள நிஷ்களம், சகளம் என்றும், சூட்சுமம் ஸ்தூல-சூட்சுமம் ஸ்தூலம் என்றும், தத்துவம் பிரபாவம் மூர்த்தி என்றும் சைவ சித்தாந்தம் கூறுகிறது. இவற்றை அத்வைத வேதாந்தம் குறிப்பிடும் பிரம்மம், ஹிரண்யகர்ப்பன், ஈசுவரன் ஆகிய மூன்று நிலைகளுடன் ஒப்பிடலாம்.



**நிஷ்களம்**

சகள என்ற சொல்லுக்கு உறுப்பு, உருவம் என்பது பொருள். நிஷ்களம் என்ற சொல்லுக்கு உருவமற்றது, இரண்டற்ற ஒன்றேயான சத்தியம் என்பது பொருள்.

பிரபஞ்சம் அனைத்தும் பிரளய காலத்தில் ஒடுங்குவதற்கு நிஷ்களம் ஆதாரமாக இருக்கிறது. இந்த நிஷ்கள நிலையில் பரம்பொருளுக்கு ஆதியும் அந்தமும் இல்லை. வரம்பற்ற எங்கும் நிறைந்த நிலை அது.

அணுவுக்கு அணுவாகவும் பெரியனவற்றுள் பெரியதாகவும் விளங்கும் பரம்பொருளின் நிஷ்களம் என்ற இந்த நிலை மனதுக்கும் வாக்குக்கும் எட்டாதது.

பரம்பொருளின் நிஷ்களம் எனப் பெறும் மேலான நிலையை அருணந்திதேவரின் பின்வரும் பாடல் நன்ருக விளக்குகிறது—

சிவன் அருஉருவும் அல்லன்,
சித்தினேடு அசித்தும் அல்லன்,
பவம் முதல் தொழில்கள் ஒன்றும்
பண்ணிடுவானும் அல்லன்,
தவம் முதல் யோகம் போகம்
தரிப்பவன் அல்லன், தானே
இவை பெற இயைந்தும் ஒன்றும்
இயைந்திடா இயல்பினனே.

மக்கள் பிறவி எடுத்ததன் பலனை ஆராய வேண்டும் ஆத்மாவைக் காண வேண்டும்.

—ஞானனந்தர்

பிரளயகால முடிவில் சச்சிதானந்தப் பரம்பொருள் ஆன்மாக்கள்மீது கொண்ட கருணை காரணமாகத் தனது சங்கற்பத்தின் மூலம் ஐந்து விதச் சக்திகளைத் தோற்றுவிக்கிறது. அவை பரா சக்தி, ஆதி சக்தி, இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி என்பன வாகும். இந்த ஐந்து சக்திகளிடமிருந்து ஐந்து சதாசிவ தத்துவங்கள் தோன்றின. ஐந்து சதாசிவ தத்துவங்களைக் கொண்ட சிவமூர்த்தி ஐந்து திருமுகங்களை உடையவர். அது காரணமாக, அவருக்குப் பஞ்சானன் என்பது பெயர். பஞ்சப் பிரம்மாக்கள் என்றும் அவ்வருக்கு வேறொரு பெயர் உண்டு.

கிழக்கு நோக்கிய முகம் ஈசானன் அல்லது தத்புருஷம் என்றும், தெற்கு நோக்கிய திருமுகம் அகோரம் அல்லது ஈசுவரன் என்றும், மேற்கு நோக்கிய முகம் சத்தியோஜாதம் அல்லது பிரம்மா என்றும், வடக்கு நோக்கிய முகம் வாமதேவம் அல்லது ஈசானம் எனவும், மேல் நோக்கிய முகம் சதாசிவம் என்றும் வழங்கப்பெறுகின்றன.

ஸ்தாபனம் (பிரதிஷ்டை), அபிஷேகம் போன்ற பூஜைக்கு உரிய எல்லாக் கிரியைகளும் ஈசான மூர்த்திக்கே செய்யப்படும். இந்த மூர்த்தி, பளிங்கு போன்று வெண்ணிறமானவர். யோகத்திலும் மந்திரசித்தியிலும் பூரணநிலை அடைந்தவர்களின் தியானத்திற்கே ஈசானன் தவிர ஏனைய நான்கு முகங்கள் உரியவை. இந்த ஐந்து முகங்களிலிருந்தே சிவாகமங்கள் அருளப்பெற்றன என்று சைவ சித்தாந்தம் குறிப்பிடுகிறது.

இறைவனின் மேல்நோக்கிய திருமுகம் சதாசிவம். இது உன்னத அம்சங்களின்



அடையாளமாகத் திகழ்கிறது. மேல் நோக்கிய சதாசிவ முகம் இந்தப் பிரபஞ்சத்தின் ஆகாய தத்துவத்திற்கு உரிய அதிதேவதையாகும். ஆன்மாக்களுக்கு வீடுபேற்றை அளிப்பதும் இந்த முகமே ஆகும்.

கிழக்கு நோக்கிய தத்புருஷம், வாயு தத்துவத்தை ஆளும் சக்தியின் அடையாளம். இது ஆன்மிக முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கும் இருள் சக்தியின் அடையாளமாகும். உண்மையை அறியவொண்ணமல் மயக்கும் சக்தி இது.

தெற்கு நோக்கிய அகோர முகம் அக்கினி தத்துவத்தை ஆளும் சக்தியாக விளங்குகிறது. இதுவே பிரபஞ்சத்தை ஆக்கவும் அழிக்கவும் வல்ல சக்தியின் அடையாளம்.

வடக்கு நோக்கிய முகம் வாமதேவம். இது நீர்த் தத்துவத்தின் பிரதான சக்தியாகத் திகழ்கிறது. பரம்பொருளின் இந்தச் சக்தியே உலகத்தைப் பாதுகாக்கிறது. இந்தச் சிவ மூர்த்தியின் நிறம் சிவப்பு. ★



தனக்குத் தீங்கு செய்யும் என்று நினைப்பதைப் பிறருக்குச் செய்தல் கூடாது. புலன்களின் அடக்கத்தால் தர்மம் உண்டாகிறது. ஆசையின் விளைவால் அதர்மம் உண்டாகிறது.

—விதுரநீதி

# எந்த உணவு நல்லது?

சி. வி. சிவராமகிருஷ்ணன்

பக்தி மார்க்கத்தில் தன்னை இட்டு வளர்த்துக்கொண்டு இறைவனோடு இரண்டறக் கலக்க உண்மையான ஆர்வம் கொண்ட சாதகனுக்கு ராமானுஜர் சில முக்கியமான விஷயங்களைப் போதிக்கிறார். அவற்றைத் தளராத ஊக்கத்தோடு கடைப்பிடிக்க வேண்டுமென்று வலியுறுத்துகிறார். அவையாவன— 1. விவேகம் (உணவைப் பகுத்து ஏற்றல்), 2. விமோகம் (பற்றுக்களிலிருந்து விடுபடுதல்), 3. அப்பியாசம் (பயிற்சி), 4. கிரியை (நற்கருமம்), 5. கல்யாணம் (சத்தியத்தோடு கூடிய தூய்மை, நேர்மை, அன்பு, அஹிம்சை, தர்மம் முதலியன), 6. அநவஸாதம் (மகிழ்ச்சி), 7. அநுத்தர்ஷம் (மிகைப்பட்ட களிபேறு கொள்ளாமை).

இவற்றில் முதலாவதாக விவேகம் என்பது அமைந்துள்ளது. விவேகம் அல்லது உணவைப் பகுத்து ஏற்றல் என்ற இந்த விதி, சாதனையில் முன்னேறி லட்சியத்தை அடைய நினைக்கும் சாதகனுக்கு மிகவும் முக்கியமான விஷயம்.

உணவு, மனதின் முக்குணங்களான சத்துவம் ராஜஸம் தாமஸம் என்ற மூன்றின் அடிப்படையில் அமைந்துள்ளது. உண்ணும் உணவிற்கு ஏற்ப மனிதனின் குணங்கள் நிறைவுடன் அல்லது குறைவுடன் காண்கின்றன.

உணர்ச்சிகளை ஒழுங்குபடுத்தும் சாதனங்களில் நாம் உட்கொள்ளும் உணவு முக்கியமானது. மனிதன் தன்னிடத்திலுள்ள ராஜஸ குணத்தால், தாமஸ குணத்தை அழித்து, மீண்டும் சத்துவத்தால் ராஜஸத்தைத் துடைத்து, சுத்த சத்துவ நிலையில் விளங்கும்போதே, பற்றற்ற தூய இறைபக்தி உருப்பெற்று உறுதிப்படுகிறது.

உள்ளத்தைக் கிளர்ச்சியுறச் செய்யும் ராஜஸ உணவையும், ஆழ்ந்த உறக்கத்தையும், செயலில் மந்தத்தன்மையையும் ஊட்டும் தாமஸ உணவையும் விலக்கி, மனிதன் தூயதும், மன அமைதிக்கும் சாந்திக்கும் துணை செய்வதுமான சத்துவ உணவையே தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். அத்தகைய தூய உணவு உள்ளத்தில் பவித்திரமான பக்தி உறுதிபெறத் துணை செய்யும்.



'ஆகாரம் தூய்மையாக இருக்குமானால் சத்துவ சுத்தி அல்லது மனத் தூய்மை உண்டாகிறது. மனத் தூய்மையால் இறையுணர்வு உறுதிப்படுகிறது' என்று சாந்தோக்யோபநிஷதம் கூறுகிறது.

மூன்று வகைப்பட்ட தோஷங்களினால் உணவு பாழ்படுகிறது என்று சொல்லப்படுகிறது. அவையாவன—1. ஜாதி தோஷம், 2. ஆச்ரய தோஷம், 3. நிமித்த தோஷம்.

ஜாதி தோஷம் என்பது, உணவுப் பொருள்களில் இயற்கையிலேயே ஏற்படும் குறை அதாவது அவற்றின் இயல்பான குணம். வெள்ளைப் பூண்டு, வெங்காயம், மது, மாமிசம் முதலியன இயல்பாகவே தம்மளவில் குற்றமுள்ள உணவுகள். ஏனெனில், மனிதன் எந்த மனத்



தூய்மையைக் காத்து இறையுணர்வில் லயிக்க வேண்டுமோ அந்த மனதின் தூய தன்மையை அவை கெடுத்து, அதன் சாந்தியைக் கெடுத்துத் தனக்குத் தானே பகையாக வளரும்படி அவனைச் செய்து விடுகின்றன.

காமம், குரோதம் முதலிய தடித்த உணர்ச்சிகளுக்கு இந்த உணவுப்பொருள்களே தூண்டுதலாக அமைகின்றன. தூய வாழ்க்கைக்குப் பகையாகச் செயற்படுகின்றன. எனவே இது பக்தி சாதனையை மேற்கொண்டுள்ள சாதகனுக்கு முதற் பகை.

பூமிக்குள்ளே வரும் கிழங்கு வகைகளுக்குத் தமோகுண விருத்தி உண்டு. எனவே சாதகன் அவற்றை விலக்க வேண்டும்.



இரண்டாவது குறைபாடு ஆச்ரய தோஷம் என்பது. ஒரு மனிதனின் மன உணர்ச்சிகளுக்கும், அவற்றின் அடிப்படையில் அமையும் அவனது சுபாவம் அல்லது குண இயல்புகளுக்கும் மகத்தான சக்தி உண்டு. அவை கண்ணுக்குப் புலப்படாமல், பிறர் மனங்களின் மீது ஆதிக்கம் செலுத்த வல்லவை.

நல்லார் இணக்கத்தில் நிலைத்துள்ள வரையில் மனிதன் நல்லியல்புகளால் நிரப்பப்பட்டும், தீயோரின் உறவில் கலக்கிறபோது, மன விகாரங்களுக்கு ஆட்பட்டு நிலைகுலைந்து வாழ்வதையும் நாம் பார்க்கிறோம்.

மனிதனின் மனோ விருத்திகள் அவனோடு தொடர்புள்ள பொருள் அனைத்திலும் மிகவும் நுட்பமாகப் பரவியிருக்கும். எனவேதான் கீழான இயல்புடையோர் இடும் உணவை ஏற்கலாகாது என்று சான்றோர் குறிப்பிட்டுள்ளனர்.

மேலோன், கீழோன் என்ற பாகுபாடு, அவனவன் மனப் பரிபாகத்துக்கு ஏற்ப அமைவது. மனிதனின் மேன்மையோ கீழ்மையோ அவனவன் வாழும் அக, புற வாழ்வுகளின் பாங்கிற்கு ஏற்பவே அமையும். அகமும் புறமும் அசுத்தமில்லாமல் முரண்படாமல் இயங்கும்போது மனிதன் சான்றோனாகிறான். அகத்தின் அழுக்கு மனிதனின் ஆன்மப் பொலிவை அசுத்தப்படுத்தி அழித்துவிடுகிறது.

> எல்லாத் தேவர்களும் நமது உடலிலேயே இருக்கின்றனர். வெளியில் மூர்த்தித் தியானம் மூலமாக, மனதில் அவற்றைப் பதிய வைத்துக் கொள்வது மனதைத் திருத்தச் சாதனமாக இருக்கிறது. உள்ளிருக்கும் மூர்த்திகளையெல்லாம், மனதை அடக்குவதனால், வெளியில் இருக்கும் பிம்பங்களுடைய உதவியில்லாமல் நாம் தியானிக்க முடியும்.
>
> **—சிருங்கேரி ஜகத்குரு**

சமைக்கிறபோது சமைப்போரின் தீய எண்ண அலைகள் உணவில் நுட்பமாகப் பரவி, உணவின் தூய்மையைக் கெடுத்துவிடும். அந்த உணவினால், உண்பவரின் மனநிலையும் கெட வாய்ப்பு உண்டு. இதையே ஆச்ரய தோஷம் என்று சான்றோர் குறிப்பிட்டுள்ளனர்.

தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த சபரி தந்த எச்சிற்கனிகளை ராகவன் அமுதென ஏற்று உண்டதன் உட்கருத்து, ‘உணவு படைப்பவரின் மனத்தூய்மை, பக்தி, உணவிலும் நுட்பமாகப் பரவி அதைச் சாத்துவிக உணவாகவே மாற்றிவிடுகிறது’ என்பதுதான்.

எனவே, சாதகன் எங்கு எவரிடம் எந்த அளவு எதை உண்ண வேண்டும் என்பதைத் தெளிவாக அறிந்து முறையாகவும் கண்டிப்பாகவும் அதைக் கடைப்பிடிக்க வேண்டும். சாதனையில் மேம்பாட்டுக்கு இது பேருதவி செய்யும்.

நிமித்த தோஷம் என்பது மூன்றாவது வகைக் குறைபாடு. உணவு பிற சூழலால் கெட்டுப்போதல் அல்லது இடும் பாத்திரத்தின் அழுக்கால், தூய்மையின்மையால் கெட்டுப் போதல் நிமித்த தோஷம் என்று சொல்லப்படுகிறது.

ஈ, எறும்பு, பூச்சி இவற்றால் தீண்டப் பட்ட உணவும், தூசு, குப்பை, உரோமம், மண், பிற அழுக்குகள் படிந்த உணவும், மாசு படிந்த, தூய்மை இழந்த உணவாகும். இத்தகைய உணவை ஏற்பவரின் மனம் மாசுறும். இந்த மாசு உணவில் சேராமல் விழிப்போடு இருப்பது சாதகன் உணவு விஷயத்தில் காட்ட வேண்டிய சிரத்தையில் அடங்கும்.



சாத்துவிக சம்பந்தமுள்ள, சுத்தமான உணவுகளையே சாதகன் ஏற்க வேண்டும்.

''ஐம்பொறிகள் அவற்றின் தன்மாத்திரைகளான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பவற்றின் வாயிலாக மனம் கிரகிக்கும் அனைத்தும் மனதுக்கு ஆகாரங்கள் ஆகின்றன. இவை உடலுக்குத் தரும் உணவைவிடச் சிறந்தவை. ஞானேந்திரியங்களால் கிரகிக்கப்படும் எவையானாலும், அவற்றை ஏற்றுக் கொள்ளும் மனதின் இயல்புக்கு ஏற்ப, சாதகனின் எழுச்சியோ வீழ்ச்சியோ அமைந்துவிடுகிறது'' என்பது ஆதி சங்கரரின் கருத்தாகும்.

கீதை சாத்துவிக, ராஜஸிக, தாமஸிக உணவுகளின் தன்மையை அழகாகத் தெளிவுபடுத்துகிறது. பகவான் சொல்லுகிறார்— அர்ஜுனா! ஆயுளையும் உடல் வளத்தையும், பலத்தையும் ஆரோக்கியத்தையும், சுகத்தையும் பிரியத்தையும் வளர்ப்பவை, நல்ல ரஸம் நிரம்பியவை, பசையுள்ளவை, வலிவு தருபவை சாத்துவிகர்களுக்குப் பிரியமான சாத்துவிக உணவாகும்.

கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, அதிக வெப்பம் காரம் வறட்சி எரிச்சல் மிகுந்தவையும், துன்பம் துயரம் நோய் உண்டுபண்ணுபவையுமான உணவுகள் ரஜோகுணத்தாருக்கு விருப்பமான ராஜஸ உணவுகள்.

யாமம் கழிந்த, சுவையற்ற, துர்நாற்றமெடுத்த பழைய, எச்சிலான, தூய்மையற்ற உணவு தமோகுணத்தாருக்குப் பிரியமான தாமஸிக உணவு. ★



திருக்கயிலையின் ஒரு காட்சி



# ஆத்ம தத்துவம்

## அஷ்டாவக்கிர கீதை

'ஹரிணீ'

அஷ்டாவக்கிர முனிவர் பின்வரும் வேதாந்த உண்மைகளை ஜனக மன்னனுக்குக் கூறினர்:—

அன்பனே, கேள்! தூய அறிவுள்ள மனிதன் அதாவது சத்துவ புத்தியுள்ளவன் அவ்வப்போது கேள்வியுற்ற நல்லுபதேசங்களால் நற்பயனை அடைந்து இன்புறுகிருன். ஆனல் அஞ்ஞானியான மற்றவனே தடுமாற்றத்தினல் திகைக்கிருன்.

விஷய சுகங்களில் வெறுப்பு ஏற்படுவதே மோட்சம். உலக சுகங்களில் விருப்பம் கொள்வது பந்தம். இதுவே ஞானம். இனி உன் இஷ்டம் எதுவோ அதைச் செய்வாயாக.

லௌகிக சுகபோகங்களை அனுபவிக்க விரும்பும் அறிவிலிகள் தத்துவஞானம் எனப்பெறும் மெய்ஞ் ஞானத்தைப் புறக்கணிக்கிருர்கள்.

அரசே! நீ இந்த உடல் அல்ல, செயல் புரிபவனும் (கர்த்தா), அதன் பயனை நுகர்பவனும் (போக்தா) நீயல்ல. நீ ஞான சொரூபமாகவே திகழ்கிருய். எப்போதும் பார்வையாளனுக, சாட்சி வடிவமாக மட்டும் விளங்குகிருய். எதையுமே விரும்பாதவனுகிய நீ சுகமாகச் சஞ்சரிப்பாயாக.

விருப்பு வெறுப்புகள் மனதின் இயல்புகள். உனக்கோ மனம் என்பதே இல்லை. மாறுபாடற்ற ஞானமயமாக விளங்கும் நீ சுகமாகச் சஞ்சரித்துக்கொண்டிருப்பாயாக.

இந்தப் படைப்பு முழுவதிலும் தன்னையே கண்டு, தன்னிடம் ஜீவராசிகள் அனைத்தையும் கண்டு, ஆத்மாவை அறிந்து சுகமாக இருந்து வருவாயாக.

நான், எனது என்ற அகங்கார மமகார எண்ணங்களிலிருந்து விடுபட்டு, ஆத்மாவை அறிந்து, சுகமாக இருந்து வருவாயாக.

நான் சொல்வதை நம்பு. ஓ குழந்தாய், நம்பு! இந்த உலகத்தைக் கண்டு மயங்காதே! நீ மாயைக்கு அப்பாற்பட்ட ஞானசொரூபம் என்பதையும், ஞான மயமான இறைவன் நீயே என்பதையும் உணர்வாயாக.

இயற்கையான குணங்களால் நன்கு சூழப்பட்டிருக்கும் இந்த உடலே வருகிறது, நிற்கிறது, செல்லுகிறது. ஆத்மாவோ செல்வதுமில்லை, வருவதுமில்லை. அவ்விதம் இருக்கும்போது இந்த உடலைப்பற்றி நீ ஏன் வருந்துகிருய்?

இந்த உடல் இந்த உலகம் முடியும் வரையில் இருந்தாலும் இருக்கட்டும், அல்லது இன்றைய தினமே போனுலும் போகட்டும். அது காரணமாக, சின்மய சொரூபமாக விளங்கும் உனக்கு எவ்வித குறைவோ நிறைவோ இல்லை.

பரந்த கடல் போல இருக்கும் உன்னிடம் இந்த உலகமாகிய அலைகள் இயல்பாகவே தோன்றி எழுந்தாலும் அல்லது அடங்கி மறைந்தாலும் அதனல் உனக்கு எவ்விதமான குறைவோ நிறைவோ கிடையாது.

தூய ஞானவடிவமாக ஒளிரும் உன்னிலிருந்து இந்த உலகம் வேறு அல்ல. ஆகவே நீ எதை, எங்கே, எவ்வாறு விலக்குவது? அல்லது ஏற்றுக்கொள்ளுவது? இதை ஒதுக்குவது அல்லது ஏற்பது என்பதெல்லாம் வெறும் கற்பனை மட்டுமே என்பதை நன்கு உணர்வாயாக.

அழிவற்றதாக, மாசற்றதாக, அமை

தியே வடிவாக, இரண்டற்ற ஏகசொரூப மாக, பேரறிவுமயமாகப் பிரகாசிக் கும் உன்னிடம் பிறப்பு என்பது ஏது? செயல் என்பது ஏது? நான் என்ற எண் ணமும்தான் ஏது?

எதை நீ பார்க்கிறாயோ, அதில் ஏக வடிவமான நீயே காணப்படுகிறாய் என் பதை அறிந்துகொள்.

'இது நான்', 'இது நானல்ல' என்ற வேறுபாடுகளை அடியோடு நீக்கிவிடு. காணப்படுபவை அனைத்தும் ஆத்ம சொரூபமே, எல்லாம் பிரம்ம மயமே என்று தெளிவாக அறிந்துகொண்டு, வேறு நினைவற்றவனாக, சுகமாக இரு.

தூய ஞானசொரூபனே! நிச்சயிப்பது (சங்கல்பம்), மறுப்பது (விகல்பம்) போன்ற செயல்களால் மனதை அலட் டிக்கொண்டு குழப்பம் அடையாதே. ஆனந்த வடிவமாகவே திகழும் உனது ஆன்மாவில் நீ ஒன்றுபட்டுச் சுகமாக இரு.

இந்த உலகம் என்ற கடலிலே அவன் (ஆத்மா, இறைவன்) ஒருவன் மட்டுமே இருந்தான், இருக்கிறான், இருக்கவும் போகிறான். உனக்குப் பந்தமோ மோட் சமோ எதுவுமே இல்லை. ஆகவே திருப்தி யுடன் ஆனந்தமாக இரு.

(பிரம்மத்தில் நிலைத்திருப்பது ஒன்றைத் தவிர) எல்லா வகையிலும் சிந்திப்பதை ஒழித்துவிடு. உள்ளத்திலே எதையும் நிலைக்கச் செய்யாதே. நீ விடுதலை பெற்ற ஆன்மா. முக்த புருஷ னாகவே நீ இருக்கிறாய். அவ்விதம் இருக்கும்போது சிந்திப்பதனால் உனக்கு ஆவதுதான் என்ன? இந்த உண்மையை நன்கு ஆராய்ந்து பார்.

மகனே! பல விதமான சாஸ்திரங்களை நீ பல முறை பேசியும் கேட்டும் இருப் பாய். ஆயினும் அவை யாவற்றையும் விட்டுவிட்டாலன்றி (கடந்து சென்றா லன்றி) உனக்கு ஆன்மசுகம் கிட்டாது.

**ஸ்ரீராமகிருஷ்ணர் பிறந்த இடம்**



காமார்ப்புகுரில் ஸ்ரீராமகிருஷ்ணர் பிறந்த அதே இடத்தில் இப்போது ஸ்ரீராமகிருஷ்ணர் கோயில் அமைந் துள்ளது.

**ஸ்ரீராமகிருஷ்ணர் மறைந்த இடம்**



காசிப்பூரில் ஸ்ரீராமகிருஷ்ணர் மருத்துவ சிகிச்சைக்காகத் தங்கிய இடம். இங்கே தான் பரமஹம்சர் தம் உடலை உகுத்து மகாசமாதி எய்தினார்.

கேள்விஞானம் என்பதைக் கடந்து ஆத்மதத்துவம் அனுபவஞானமாக ஆக வேண்டும். அந்த நிலையில் மட்டுமே ஆன்மசுகம் அடையப்பெறுகிறது.

ஓ அறிஞனே, கவனிப்பாயாக! சுகானுபவமோ, நற்செயல்களோ, அல்லது தியானம் செய்வதோ எதை வேண்டுமானாலும் செய். ஆனால் எல்லா வகையான ஆசைகளையும் மனதிலிருந்து அடியோடு ஒழித்து விட்டு, உன் ஆத்ம சொரூபத்திலே நிலைபெற்று இன்பமுற ஆவல் கொள்வாயாக.

அப்பனே! எல்லா விதமான முயற்சியுமே துக்கத்தைத் தரக் கூடியதுதான் என்ற உண்மையை ஒருவருமே அறிவதில்லை. இது போன்ற ஆத்ம தத்துவத்தை விளக்கும் உபதேச மொழிகளால் அபூர்வமாக யாரோ ஒரு பாக்கியசாலி தான் விடுதலை பெற்று முக்தி இன்பம் அடைகிறான்.

ஆன்ம சொரூபத்தில் நிலைத்துச் சுகம் பெறுகிறவன் கண் இமைப்பதைக்கூடச் செய்ய விரும்புவதில்லை.

எப்போது 'இதைச் செய்து விட்டோம்', 'இது செய்யப்படவில்லை' என்ற இரட்டைகளிலிருந்து மனம் விடுதலை பெறுகிறதோ, அப்போது அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றில்கூட நாட்டம் இருப்பதில்லை. அதாவது புண்ணியச் செயல்கள், செல்வம், சுகானுபவம், விடுதலையில் ஆசை ஆகியவற்றில்கூட மனம் ஆவல் கொள்வதில்லை.

உலகசுகங்களை வெறுத்தவன் பற்றற்றவனாகவே இருக்கிறான். புலனின்பங்களில் ஆவல் கொண்டவன் அவற்றிலேயே உழலுகிறான். ஆனால் விலக்குவது, ஏற்பது எனப்படும் இரண்டு விதச் செயல்களுமற்றவன் விரக்தனுமல்ல, காமியுமல்ல.

செயல்களின் (பிரவிருத்தி) ஈடுபாட்டினால் பற்றுதலும், ஒதுங்கி (நிவிருத்தி) இருப்பதனால் அதிலே வெறுப்பும் உண்டாகின்றன. ஆகவே புத்திசாலி இந்த இரண்டு செயல்களையுமே செய்யாமல் சிறு பாலகனைப் போல இருந்து வருவான்.

உலகத் தொல்லைகளிலிருந்து விடுதலை பெற நினைப்பவன், உலகத்தையே துறக்க விரும்புகிறான். ஆனால், உலகப் பற்றை ஒழித்தவனோ, தான் எங்கே எப்படி இருந்தபோதிலும் கவலையற்றிருக்கிறான். உலகத் தொல்லைகள் காரணமாக அவன் வருத்தப்படுவதே இல்லை. ஆசைகளை ஒழித்தவன் ஒருபோதும் கவலையுற மாட்டான்.

முடிவாக ஒன்று சொல்கிறேன், கேள். தேகாபிமானம் அதாவது உடலே நான் என்ற எண்ணம் கொண்டவன் எப்போதும் துயரத்தையே அனுபவிக்கிறான்.

பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவருமே உனக்கு உபதேசகர்களாக இருந்த போதிலும் அவர்கள் கூறும் உபதேசங்களை நீ உன் வாழ்க்கையில் கடைப்பிடித்து உன் மயமாகவே ஆக்கிக் கொள்ளாவிட்டால் ஆன்மசுகத்தில் நிலை பெற்றிருக்கும் உன்னதமான நிலை உனக்குக் கைகூடாது. ★

அழுக்கடைந்த உடைகளிலோ, ஆடம்பரங்களிலோ, திருநீற்றிலோ, தலையை மொட்டை அடித்துக்கொள்வதிலோ, கொம்புத் தப்பட்டை முழக்குவதிலோ பக்தி இல்லை. உள்ளத் தூய்மையே பக்திக்கு அடையாளம்.

—குரு நானக்






# பாவத்தின் தந்தை

நாடோடி

சந்திரசேகரர் என்ற அந்தணர் காசிக்குச் சென்று வேத சாஸ்திரம் அனைத்தையும் கரைத்துக் குடித்தார். கடைசியில் அவர் ஊர் திரும்பியதும், அவரைப் பார்த்து ஒருவர், ''பாவத்தின் தந்தை யார்?'' என்று ஒரு கேள்வி கேட்டார்.

இந்தக் கேள்விக்குச் சந்திரசேகரரால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. எவ்வளவோ யோசனை செய்து பார்த்தார். தம்மிடம் இருந்த சாஸ்திர நூல்களையெல்லாம் புரட்டிப் பார்த்தார். ஆனால் சரியான பதில் கிடைக்கவில்லை.

ஆகவே மீண்டும் காசிக்குச் சென்று அங்குள்ள வித்வான்களையெல்லாம் விசாரித்தார். அவர்களாலும் சரியான பதில் சொல்ல முடியவில்லை.

அதற்காக அவர் க்ஷேத்திரம் க்ஷேத்திரமாகச் சுற்றி அங்கே சந்தித்த வித்வான்களிடம், ''பாவத்தின் தந்தை யார்?'' என்று விசாரித்தார். ஆனால் அவர்கள் அளித்த பதில்கள் அவருக்குத் திருப்தியளிக்கவில்லை.

க்ஷேத்திராடனம் செய்துகொண்டே வந்த சந்திரசேகரர் கடைசியில் புனா வந்து சேர்ந்து அங்கு ஒரு தெருவழியாகச்சென்றுகொண்டிருந்தார். அவரை அந்தத் தெருவில் இருந்த ஒரு தாசி பார்த்தாள். உடனே அவள் தன் வேலைக்காரியைக் கூப்பிட்டு, ''அதோ போகும் அந்தணர் மிக்க வருத்தத்துடன் காணப்படுகிறார். என்ன காரணம் என்று விசாரித்து வா'' என்று அனுப்பினாள்.

வேலைக்காரி அந்தணரைச் சந்தித்து, ''நான் ஒரு தாசியின் வேலைக்காரி. ஏன் தாங்கள் முகவாட்டத்துடன் விளங்குகிறீர்கள் என்று என் எஜமானியம்மாள் கேட்டு வரச் சொன்னாள்'' என்றாள்.

அதற்கு அந்தணர், ''நான் ஒரு கேள்விக்குப் பதில் கண்டுபிடிக்க முடியாமல் தவித்துக்கொண்டிருக்கிறேன். அதனால் தான் முகவாட்டத்துடன் காணப்படுகிறேன்'' என்று சொன்னார்.

அது என்ன கேள்வி என்று வேலைக்காரி கேட்டதற்கு, ''பாவத்தின் தந்தை யார்?'' என்பதுதான் அந்தக் கேள்வி என்று சந்திரசேகரர் சொன்னார்.



வேலைக்காரி தாசியிடம் சென்று நடந்த விஷயங்களைச் சொன்னாள். ''அந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்கிறேன்'' என்று கூறி, ''அவரை இங்கு அழைத்து வா'' என்று தாசி சொல்ல, வேலைக்காரி அந்தணரைத் தாசியிடம் அழைத்து வந்தாள்.

தாசி அவரைப் பார்த்து, ''தங்களுக்கென்று ஒரு தனி வீடு தருகிறேன். அதில் தாங்களே சமைத்துச் சாப்பிடுங்கள். சில நாட்களில் உங்கள் கேள்விக்கு நான் பதில் சொல்கிறேன்'' என்று சொன்னாள்.

அந்தணர் தனி வீட்டில் இருந்து தாமே சமைத்துச் சாப்பிட்டார். தமக்கு

வேண்டிய தண்ணீரைத் தாமே கிணற்றிலிருந்து இழுத்துக்கொள்வாரே தவிரப் பிறர் இழுத்துக் கொடுத்தால் கூட ஆசாரக் குறைவு என்று நினைப்பார்.

சில நாட்கள் சென்றன. ஒரு நாள் தாசி அவரைப் பார்த்து, ''நான் தங்களுக்குச் சேவை செய்யும் பாக்கியத்தைத் தாங்கள் எனக்கு அளிக்கக் கூடாதா? நான் ஸ்நானம் செய்து மடியாகச் சமைத்துப் போடுகிறேன். அதைத் தாங்கள் சாப்பிடக் கூடாதா? வீணுக நீங்கள் ஏன் சமைத்துக்கொண்டு கஷ்டப்படுகிறீர்கள்? இதற்கு நீங்கள் ஒப்புக்கொண்டால் உங்களுக்கு நான் தினம் பத்துப் பொற்காசுகள் கொடுப்பேன்'' என்ருள். இதற்கு அந்தணர் சரி என்று சம்மதித்தார்.

அடுத்த நாள் காலே, தாசி எழுந்து ஸ்நானம் செய்து மடி ஆடை உடுத்துக்கொண்டு, பலவிதமான ஆகார வகைகளைச் செய்து, அவற்றை அழகிய தங்கக் கிண்ணங்களில் அவர் முன்னுல் வைத்தாள்.

அந்தணர் உணவு வகைகளைக் கண்டு சந்தோஷப்பட்டார். அவர் அவற்றைச் சாப்பிட ஆரம்பித்ததுதான் தாமதம், தாசி தங்கக் கிண்ணங்களை அவரிடமிருந்து இழுத்தாள்.



''ஏன் இப்படிச் செய்கிருய்?'' என்று அந்தணர் கேட்டார்.

''வேசியாகிய நான் தங்களுக்கு அன்னம் போட்டுத் தங்கள் ஆசாரத்தைக் கெடுக்க விரும்பவில்லே. தாங்கள் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத்தான் அப்படிச் செய்தேன். 'பாவத்தின் தந்தை யார்?' என்று கேட்டீர்களே; 'பாவத்தின் தந்தை பேராசை.' பத்துப் பொற்காசுகளுக்கு ஆசைப்பட்டுக்கொண்டு தானே நீங்கள் உங்கள் ஆசாரத்தை விட்டுவிட்டு, என் கையால் சமைத்த உணவைச் சாப்பிட இசைந்தீர்கள்?'' என்று கேட்டாள் அந்தத் தாசி. ★

# ஸ்ரீமடம் வழி

சுவாமி பிரேமானந்தர்



நல்லதையே காண்பது மிகவும் நல்லது. மணலும் சர்க்கரையும் கலந்திருந்தால் எறும்பு சர்க்கரையை மட்டும் எடுத்துக் கொள்ளுகிறது. சச்சரவுகளிலும் சண்டைகளிலும் நமக்கு என்ன வேலை?

உங்கள் கடமைகளைச் செய்யுங்கள். ஆனால் நொடிப்பொழுதுகூட நீங்கள் கர்த்தா என்று எண்ண வேண்டாம். நீங்கள் கருவிகளாக இருங்கள்; ஸ்ரீராமகிருஷ்ணர் உங்களுக்கு உதவுவார்.

ஸ்ரீராமகிருஷ்ணருடைய பூஜா முறையை சாஸ்திரப்படி உன்னால் கைக்கொள்ள முடியவில்லை என்று வருத்தப்பட்டு எனக்கு எழுதியிருக்கிறாய். அதைப் பற்றி ஒருசிறிதும் கவலைப்பட வேண்டாம். ஆண்டவன் உங்களுடைய மந்திரங்களின் விவரங்களைக் கவனிப்பதில்லை; அவன் உங்களுடைய உள்ளத்தைத்தான் பார்க்கிறான். ஆவியும் அந்தக்கரணமும் முற்றும் ஆழ்ந்த நிலையில் பூஜையைச் செய். வேண்டுவது அம்மட்டே. சுயநல வேட்கை இல்லாமல் வேலையைச் செய். கடவுள் ஒருவர்தாம் நமது குறிக்கோள். அவர் காட்சியளித்துக் கருணைபுரிவார்.

முழுமனதுடன் பிரார்த்தனை செய். அவர் உள்ளத்தைப் பார்ப்பார். ஆர்வத்துடன் வேண்டினால் அவரது அருள் சுரக்கும். நம் எல்லோருக்கும் அவர்தாம் புகலிடம். இடைவிடாமல் அவரைத் தியானித்தால் அகத்திலுள்ள அழுக்குக் கரைந்து போகும். அவருடைய அருள் பாய்வதை நீ பிரத்தியட்சமாகக் காண்பாய்.

நல்ல ஆசிரியர்களின் உதவியை நாடி ஞானநூல்களைப் படி.

உன் காலம் முழுவதையும் வேலையிலேயே செலவிட்டால் வாழ்க்கை வறண்டதாகத் தோன்றும். பக்தியுடன் விவேகமும் ஞானமும் வேண்டும். முற்றும் தூய்மையாக இருப்பதுடன் உண்மையை இறுகப் பிடிக்க வேண்டும்.

ஆன்மிக வாழ்க்கைக்கு உரிய பயிற்சிகளைத் தொடர்ந்து காலம் தவறாமல் அனுஷ்டிக்க வேண்டும். திட சித்தமும் விடா முயற்சியும் மிகவும் அவசியம். லட்சியத்தை முழு மனதுடன் நேசிக்க வேண்டும். உன் இஷ்ட தெய்வத்தின் நாமஜபத்தில் மூழ்க வேண்டும். மேல் மட்டத்தில் மிதந்தால் போதாது.

குருவின் உபதேசத்திலும் மற்றப் பெரியோர்களின் வார்த்தையிலும் சாஸ்திரத்திலும் நல்ல நம்பிக்கை தேவை. அப்படி இருந்தால் நல்ல அறுவடை கிட்டும். அதாவது நல்ல ஆன்மிக முன்னேற்றம் சித்திக்கும்.

இது சோம்பேறி சாதிக்கக் கூடியதன்று. விழிப்புடன் உழைக்க வேண்டும். விவேகம் வேண்டும். 'நான் இந்தப் பிறவியிலேயே மாசற்றவனாக ஆவேன். பற்றைத் துறப்பேன். ஜீவன் முக்தனாவேன்—உயிர் வாழும்போதே பந்தங்களிலிருந்து விடுபட்டவனாவேன். எதுதான் என்னால் முடியாது?' என்று இவ்வாறு சிந்திக்க வேண்டும்.

நாள்தோறும் தவறாமல் ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழியைப் படி. அதில் அச்சிட்டுள்ள பாடல்களை மனப்பாடம்

செய்து பாடக் கற்றுக்கொள். அச்சத்தையும் கவலையையும் ஒழித்துவிடு.

'நான் ஆண்டவனுடைய குழந்தை' என்று எண்ணிக்கொள். இப்படிச் செய்தால் பலவீனம் நம்மை அணுகவே வழி இராது. நல்ல எண்ணங்களை எண்ணினால் தீய எண்ணங்கள் பறந்துபோகும்.

**யமபடர்களே! எட்டிப் போங்கள்;**
**நான் தெய்விகத் தாயின் குமாரன்;**
**உங்களுடைய அரசனுக்கும் நான் அரசனுவேன்;**
**அன்னையின் ஒளிவடிவம் என் உள்ளத்தில் உறைவதனால்.**

இத்தகைய எண்ணங்களை வளர்த்தால் அஞ்ஞானம் ஒழிந்துபோய்விடும்.

குருதேவரின் ஒளி வீசும் வாழ்க்கை என்ற உபநிஷதம் உங்கள் முன்பு இருக்கும்பொழுது உங்களுக்கு வேறு எந்த உபநிஷதம் தேவை?

ராதாகிருஷ்ண பக்தி ரகசியத்தை ஸ்ரீசைதன்ய மகாப்பிரபு பிறந்து தமது வாழ்க்கையில் விளக்கியிராவிட்டால் ஒருவரும் உள்ளபடி அறிந்திருக்க முடியாது. அதே மாதிரிதான் நமது குருதேவர் வாழ்க்கையும் உபநிஷத உண்மைகளை விளக்கும் சிறந்த வியாக்கியானமாக உள்ளது. அவர் உபநிஷதங்களைப் படிக்கவில்லை; ஒரு புத்தகமும் படிக்கவில்லை. என்றாலும் அவர் எப்படி நுட்பமான சிக்கலான ஆன்ம விஷயங்களை அவ்வளவு எளிதாக அவ்வளவு தெளிவாக விளக்க முடிந்தது?

நீங்கள் வேதங்களை ஆராயப் புகுந்தால் அவற்றின் இலக்கணத்தையும் பல வியாக்கியானங்களையும் படிக்க வேண்டும். ஒவ்வோர் ஆசாரியரும் ஒவ்வொரு விதமாக விளக்கம் கூறியிருப்பார்கள். பண்டிதர்கள் அவைகளைப் பற்றிச் செய்யும் வாக்குவாதங்களுக்கு முடிவே இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் எளிய நடையில் அந்த உண்மைகளையெல்லாம் விளக்கிக் காட்டியிருக்கிறார். அந்த வற்றாத ஊற்று உங்களுக்குக் கிடைத்திருக்கும்போது நீங்கள் குடிநீருக்குக் கிணறு தோண்ட வேண்டுமா?

★

சூரியன் பிரகாசித்து நின்றாலும் குருடனுக்குப் பயனில்லை. அதுபோல் ஈசன் எங்கும் நிறைந்து நின்றாலும் அஞ்ஞானிகளுக்குப் பயனில்லை. —ஞானரத்னாவளி

### பசுவின் பெருமை

தினந்தோறும் கோபூஜை செய்பவன் கோபாலனின் திருவருளைப் பெற்று, கோலோகத்தை அடைவான்.

பசுக்களுக்குத் தினந்தோறும் ஆகாரம் தருபவனுக்குப் பகவான் அவன் விரும்பிய வரங்களை அளிக்கிறான்.

சாளக்ராம மூர்த்தியைப் பசும்பாலினால் அபிஷேகம் செய்பவன் எல்லாப் பாவங்களும் நீங்கப்பெற்றுப் பரமபதம் அடைகிறான்.

காலையில் எழுந்ததும் மங்களரூபிணியான பசுவைத் தினந்தோறும் தரிசிப்பவன் துன்பங்கள் நீங்கிச் சுபத்தைப் பெறுகிறான்.

பசுவையும் கன்றையும் வலம் வருபவன் பூப்பிரதக்ஷிணம் செய்த பலனைப் பெறுவான்.

—ப்ரேமிக பாகவதம்

# ஆன்மிக வினா-விடை

சுவாமி கமலாத்மானந்தர்

**கேள்வி: எங்கள் குலதெய்வம் வைரவர். அவரது வாகனம் நாய் என்பதற்கு உட்பொருள் ஏதாவது இருக்கிறதா?**

**பதில்:** வைரவரை வடநாட்டில் பைரவர் என்று அழைக்கிறார்கள். அவரது வாகனம் நாய் என்பது நான்கு வேதங்களைக் குறிக்கிறது.

**கேள்வி: ஸ்ரீராமகிருஷ்ணர் சிலரை ஈசுவர கோடிகள் என்று குறிப்பிட்டுள்ளார். ஈசுவர கோடி என்ற கருத்துக்கு இந்துமத நூல்களில் ஆதாரம் இருக்கிறதா?**

**பதில்:** ஏற்கனவே ஆன்மிக வாழ்க்கையில் உன்னத நிலை எய்தியவர்கள் நமது உலகிற்கு இறங்கி வரும்பொழுது அவர்களை ஈசுவரகோடி, தெய்வத்திற்கு ஒப்பானவர்கள், நடமாடும் தெய்வங்கள் என்கிறோம். பெரியோர்களைப் பகவான் என்று நாம் கூறுவதே இதனால்தான். இதற்கு ராமாயணம், மகாபாரதம், புராணங்கள் ஆகியவற்றில் ஆதாரம் உள்ளது. வைணவம் சிலரை நித்திய சூரிகள் என்று சிறப்பித்துக் கூறுகிறது.

**கேள்வி: சதுர்வேதிமங்கலம் என்ற ஊருக்கும் வேதத்திற்கும் ஏதாவது தொடர்பு இருக்கிறதா?**

**பதில்:** நான்கு வேதங்களையும் கற்றறிந்த அறிஞர்களைச் 'சதுர்வேதிகள்' என்று அழைப்பார்கள். அந்தக் காலத்தில் சதுர்வேதிகளான வேத விற்பன்னர்களுக்கு அரசர்கள் வழங்கிய ஊர்களைச் 'சதுர்வேதி மங்கலங்கள்' என்று கூறுவர்.

**கேள்வி: நாடி ஸ்தலங்கள் யாவை?**

**பதில்:** இடைகலை — இலங்கை; பிங்கலை—இமயம்; சுழுமுனை— தில்லை. இவை மூன்றும் நாடி ஸ்தலங்களாகும்.

**கேள்வி: ஸ்ரீராமபிரான் சேது சமைத்தபோது அணிலும் தன்னால் இயன்ற உதவியைச் செய்தது. அதைக் கண்டு மகிழ்ந்த ராமர் அன்புடன் அணிலைத் தடவிக் கொடுத்தார். இதுவே அணிலின் முதுகில் கோடுகள் உண்டாகக் காரணம். இந்த நிகழ்ச்சி எந்த ராமாயணத்தில் இடம் பெற்றுள்ளது?**

**பதில்:** இந்த நிகழ்ச்சி, வால்மீகி, கம்பர், துளசிதாசர் ஆகியோர் இயற்றிய ராமாயணங்களில் குறிப்பிடப்படவில்லை.

இந்தியா முழுவதிலும் எத்தனை எத்தனையோ ராமாயணங்கள் வழக்கில் உள்ளன. அவற்றில் எந்த ராமாயணத்தில் இந்தச் சம்பவம் இடம் பெற்றுள்ளது என்பது தெரியவில்லை. வழிவழியாக வந்துள்ள செவிவழிக் கதையாகவும் இது இருக்கக் கூடும். ஆனால் தாங்கள் குறிப்பிடும் ஸ்ரீராமரும் அணிலும் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சி இந்தியா முழுவதிலுமுள்ள ஹிந்துக்கள் அறிந்ததே. வட இந்தியாவிலும் ஸ்ரீராமர் அணிலைத் தடவிக் கொடுப்பது போன்ற வண்ணப் படங்கள் வழக்கத்தில் உள்ளன. பக்தியுடன் செய்யப்படும் சிறு செயலையும் ஆண்டவன் உவப்போடு ஏற்றுக்கொள்கிறான்.

உன்னதப் பணிகளுக்கு நம்மால் இயன்ற சிறு பங்கையேனும் செலுத்த வேண்டும் என்ற உண்மையை ஸ்ரீராமர் அணிலைத் தடவிக் கொடுத்த நிகழ்ச்சி உணர்த்துகிறது.

இந்த நிகழ்ச்சிக்கு அறவே ஆதாரம் இல்லை என்றும் சொல்லிவிட முடியாது. காரணம், தொண்டரடிப்பொடியாழ்வாரின் ஒரு பாசுரத்தில் இது பற்றிய குறிப்பு இருக்கிறது. அது வருமாறு-

''குரங்குகள் மலையை நூக்கக்
குளித்துத் தாம் புரண்டிட்டு ஓடித்
தரங்கநீர் அடைக்கல் உற்ற
சலம் இலா அணிலும் போலேன்.''

மேற்கூறிய பாசுரத்திற்கு வியாக்கியான ஆசிரியர், "இது ஆழ்வார் தாமாகச் சாட்சாத்கரித்த விருந்தாந்தம் என்பர் பெரியோர். மற்ற ஆழ்வார்களும் திவ்யப் பிரபந்தங்களில் இவ்வாறு தாமாகச் சாட்சாத்கரித்த விருத்தாந்தங்கள் சில கூறப்பட்டுள்ளமை அறிக'' என்று எழுதியுள்ளார்.

**கேள்வி: நான் சுவாமியை வணங்கும் சில சமயங்களில் சுவாமியைப்பற்றிப் பல துர் எண்ணங்கள் என் மனதில் தோன்றுகின்றன. இது நான் தியானம் செய்யும் சமயங்களில் எனக்கு இடையூருக இருக்கிறது. இந்த மாதிரி எண்ணங்கள் என் மனதில் ஏன் தோன்றுகின்றன? இவற்றைப் போக்குவதற்கு எந்த வழியைப் பின்பற்ற வேண்டும்?**

**பதில்:** பெருங்காய டப்பாவில் பெருங்காயம் இல்லாவிட்டாலும் பூர்வ வாசனை இருக்கும். அது போல் இந்தப் பிறவியிலோ முற்பிறவிகளிலோ தெய்வத்தைப்பற்றிய கெட்ட எண்ணங்களைப் படித்தோ, கேட்டோ, நாமே எண்ணியோ இருந்தால் அவை நம் வசம் இல்லாமல் கனவிலும் நனவிலும் பூஜை, தியானம் முதலிய சமயங்களிலும் எழக் கூடும். அவற்றை முறியடிக்க ஒரே வழி **'ப்ரதிபக்ஷ பாவனம்'** என்ற, தூய எண்ணங்களை மேன்மேலும் வளர்ப்பதும், கெட்ட சகவாசத்தை நீக்குவதும், நல்ல நூல்களைப் பயில்வதும், தெய்வ பக்தி உள்ளவர்களின் கூட்டுறவை அதிகமாக நாடுவதும்தான்.

கெட்ட எண்ணங்கள் யாவும் எதிர் மறையானவை. தூய எண்ணங்கள் யாவும் உடன்பாடானவை. கெட்ட எண்ணங்களை நீக்குவதற்குத் தூய எண்ணங்களை வளர்ப்பதுதான் வழி.

ஒருவன் கிழக்கு நோக்கிச் செல்லச் செல்ல மேற்கிலிருந்து விலகிச் செல்லுகிருன். அது போல் தூய எண்ணங்களை உள்ளத்தில் நிரப்ப நிரப்ப, கெட்ட எண்ணங்களின் வலிமை குறைந்துவிடுகிறது.

நமது சந்தேகங்களே நம் துரோகிகள். நாம் முயற்சி செய்து பெற வேண்டிய நன்மைகளை அச்சத்தின் மூலம் இவை தடுத்துவிடுகின்றன.

**—ஷேக்ஸ்பியர்**

ஹரியின் நாமம் ஒன்றே இந்தச் சம்சார சாகரத்தைக் கடக்கக்கூடிய சிறந்த படகாகும். கலியுகத்தில் இறைவனின் நாமத்தைத் தவிர வேறு எந்தச் சாதனையும் சீக்கிரம் கைகூடி வராது. **—ஞானேச்வரர்**

ஒருவன் ஏதோ ஓர் அசுத்தத்தை மிதித்துவிட்டான் என்று வைத்துக் கொள்வோம். பிறகு அவன் தண்ணீரில் அதைக் கழுவித் தன்னைச் சுத்தப்படுத்திக் கொள்கிருன். பிறகு தனக்கென அமைந்த கடமைகளில் மேற்கொண்டு அவன் ஈடுபடுகிருன். அவன், ஒரு சமயத்தில் தான் தீண்ட நேர்ந்த அசுத்தத்தைப் பற்றியே சதா காலமும் நினைத்துக்கொண்டு உட்கார்ந்துவிடுவதில்லை.

துர்எண்ணம், மற்றும் ஆன்மிக வாழ்க்கையில் ஏதோ ஒரு சமயம் ஏற்படும் வழுக்கல்கள் ஆகியவை அனைத்தும் மிதிக்க நேர்ந்த அசுத்தம் போன்றவை. அந்த எண்ணங்களுக்கு ஒரு முக்கியத்துவமும் தராமல் ஒதுக்கிவிட்டு, நற்சிந்தனைகளிலும் நற்செயல்களிலும் மேற்கொண்டு நம்மை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்.

**கேள்வி: சிற்றின்பத்தில் ஆழ்ந்து பக்திவழியில் தவறிவிடாமல் இருப்பதற்கு என்ன வழி?**

**பதில்:** முந்திய கேள்விக்குத் தந்த பதில் இதற்கும் பொருந்தும்.

**கேள்வி: இருபத்துநான்கு தத்துவங்கள் என்பவை யாவை?**

**பதில்:** 1. மஹத், 2. புத்தி, 3. அகங்காரம், 4. மனம், 5-9. பஞ்ச ஞானேந்திரியங்கள், 10-14. பஞ்ச கர்மேந்திரியங்கள், 15-19. பஞ்ச தன்மாத்திரைகள், 20-24. பஞ்ச பூதங்கள்.

# ஓர் அறிவிப்பு

போன்பிற்குரிய வாசகருக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. அன்பும் வணக்கங்களும்.

கடந்த ஆண்டு இந்த நேரத்தில் விஜயத்தின் ஒரு பிரதிக்குத் தபால் கட்டணம் 5 காசு இருந்தது. இப்போதோ 25 காசு என்று உயர்ந்துள்ளது. எனவே, விஜயம் ஓர் ஆண்டுக்குரிய தபால் கட்டணம் மட்டுமே ஒரு சந்தாவுக்கு இப்போது ரூ. 3 ஆகிறது. விஜயம் விலாசதாரர் பெயர் அச்சிடப்படும் பிராட்மா அலுமினியப் பிளேட் ஒரு சந்தாவிற்கு ரூ. 2 என்று ஏற்கனவே இருந்து வருகிறது. (இதன் விலை இப்போதைய நிலையில் விரைவில் உயர்ந்தாலும் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. சந்தாதாரர்கள் கூடிய வரையில் அடிக்கடியும் முகவரி மாற்றம் செய்யாமல் இருக்கக் கோருகிறோம்.)

சமீபத்தில் ஏற்பட்ட தபால் கட்டண உயர்வு, காகித விலை உயர்வு, அச்சுச் செலவு போன்ற செலவுகளை முன்னிட்டு, தவிர்க்க இயலாத காரணத்தினால் ஆண்டுச் சந்தாவையும் தனிப்பிரதி விலையையும் உயர்த்தி ஆகவேண்டிய கட்டாயம் இப்போது ஏற்பட்டிருப்பதை மிகவும் மனவருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

வாசக அன்பர்கள் விஜயத்திற்கு ஏற்பட்டிருக்கும் நிர்ப்பந்த நிலையை உணர்ந்தும், இந்தச் சந்தா உயர்வை ஏற்றும் விஜயத்தின் ஆன்மிகப் பணி எப்போதும் போல் சிறந்து விளங்க உதவி புரியக் கோருகிறோம்.

இதற்கு முன்பு வரை இருந்த சந்தா விவரம் இந்த இதழின் விஜயம் அட்டையின் இரண்டாம் பக்கத்தில் தரப்பட்டுள்ளது. இந்த ஆண்டு மார்ச் முதல் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்பவர்களும் புதிய சந்தாதாரர்களும், ஆண்டுச் சந்தா ரூ. 15 என்று கணக்கிட்டு, சந்தாத் தொகையை அனுப்பி வைத்து, விஜயத்தின் ஞானப் பணிக்குத் தொடர்ந்து ஒத்துழைக்கக் கோருகிறோம்.



## புதிய சந்தா விவரம் —1983 மார்ச் முதல்

**ஆண்டுச் சந்தா**

இந்தியா ரூ. 15
இலங்கை ரூ. 18
(இந்திய நாணய மதிப்பில்)
சிங்கப்பூர் & மலேசியா $ 10
பிற நாடுகள் £ 2.5

**ஆயுள் சந்தா**

இந்தியா ரூ. 150
சிங்கப்பூர் & மலேசியா $ 150
பிற நாடுகள் £ 35

**மே 1983 முதல் தனிப் பிரதி இந்தியாவில் ரூ. 1-50**

# அருள் என்ற செல்வம்

அலங்காரம் தேவராஜன்

இந்தியாவில் ஓங்கி உயர்ந்து வளர்ந்து நிமிர்ந்து நிற்பது இமயமலை. இமயத்தினும் உயர்ந்து அகன்று விரிந்து பரந்து நிற்பது ராமாயணம்.

ராமாயணம் மனித குலத்துக்குக் கிடைத்த இலக்கியப் பெருஞ் செல்வம். ஆதிகவி வால்மீகி அளித்த அழியாத செல்வம்.

காற்று, மழை, தீ முதலியவற்றுள் எதனாலும் எக்காலத்திலும் அழிக்க முடியாத உயிர்க் காவியம் ராமாயணம்.

இலக்கியச் சோலையாகிய ராமாயணத்தின் ஒப்பற்ற ஓர் கருத்தினை உலகவழக்கோடு ஒப்புநோக்குவோம்.

சிற்றன்னை பணியால் முடிதுறந்து நாடிழந்து, நகரிழந்து, வீடிழந்து, காடு நோக்கிச் செல்கிறான் ராமன். லட்சுமணனும் ராமனை நிழலெனத் தொடர்கிறான். அவன் அண்ணனுக்கு அடிமை செய்வதையே பேறாகக் கொண்டவன். காட்டிலே வீடமைக்க அவன் கையிலே கூடையும் கூந்தாலியுமாக ராமன்பின் செல்கிறான்.

பெற்றாரையும் உற்றாரையும் கைப்பிடித்த மனைவியையுங்கூடக் கைவிட்டுப் பரம ஏழையாகக் கானகம் செல்லும் லட்சுமணனை, 'லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:' என்கிறார் வால்மீகி. 'லட்சுமணன் திருவருள் பெற்றவன்' என்கிறார். பரம ஏழையான லட்சுமணனை 'அழியாச் செல்வன்' என்கிறார் மகரிஷி.

லட்சுமணன் உத்தம க்ஷத்திரிய குலத்தில் உதித்தவன்; ராமனின் தம்பி. ராமனோ திருமாலின் அவதாரம். 'திருமாலுக்கு அடிமை செய்' என்பது பெரியோர் வாக்கு. இதையே லட்சுமணன் செய்தான். ராமனுக்குத் தொண்டு செய்வதையே தனக்குப் பேறாகக் கருதினான்.

வைணவர்கள் திருமாலுக்குக் கைங்கரியம் செய்வதையே 'வைஷ்ணவஸ்ரீ' என்பர். இது அழியாச் செல்வம். இந்தக் கைங்கரியத்தைச் செய்தே லட்சுமணன் 'லக்ஷ்மிஸம்பந்நன்' ஆனான்.

இதே போல, லங்கா ராஜ்யத்தை விட்டு, மனைவி மக்களைத் துறந்து, செல்வங்கள் எல்லாவற்றையும் விட்டு, நிற்கக்கூட நிலமில்லாமல் ஆகாயத்தில் நின்றுகொண்டு ராகவனைச் சரணமடைந்து புகலிடம் கேட்கும் விபீஷணனை, 'அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்' என்கிறார் வால்மீகி. கதியற்ற நிலையில் நிற்கும் விபீஷணனை 'ஸ்ரீமாந்' என்கிறார்; 'திருநிறைச் செல்வன்' என்கிறார் மகரிஷி.



விபீஷணனோ அரக்கர் குலத்துதித்தவன்; துராத்மாவான ராவணன் தம்பி. ராவணனோ வரபலம் மிக்கவன். பெற்ற வரத்தை நல்வழியில் பயன்படுத்தத் தவறியவன். வரபலத்தால் வலிமை கொண்ட அவன் பிறன்மனை நயத்தல் என்ற தீய செயலைத் துணிந்து செய்தான். யாரிடமிருந்து செல்வத்தைப் பெற வேண்டுமோ அந்தத் திருமகளையே சிறையிலிட்டான். பிராட்டியின் பேரருள் அவனை விட்டுப் பிரிந்தது.

அண்ணன் அழிந்துபோகக் கூடாதே என்ற பரிவினால் விபீஷணன் ராவணனுக்கு எத்தனையோ நீதிகளை எடுத்துரைத்தான். அத்துடன் நிற்காமல் தன் மகளைக் கொண்டு பிராட்டிக்கு இதம்

சொலலித் தேற்றி வந்தான். இதன் பயனாக, அவன் லட்சுமீ கடாக்ஷம் பெற்றான்.

எவ்வளவு சொல்லியும் ராவணன் திருந்தவில்லை. உடனே விபீஷணன் ராவணனை விட்டான், இலங்கையை விட்டான்; ஏன், தன் பெண்டு பிள்ளைகளையே விட்டான். இலங்கையின் மண்ணைக்கூட மிதியாமல் ஆகாயத்திலே நின்றுகொண்டு, தர்மக் கடலாக வந்திருந்த ராமனைச் சரணமடைந்தான்.

இவ்வாறு விட வேண்டியவற்றை விட்டு, பற்ற வேண்டியதைப் பற்றி நிற்கும் விபீஷணனை, 'அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்' என்று கூறுகிறார் வால்மீகி மகரிஷி. அவன் நிற்கும் ஆகாயம், கண்ணுக்கெட்டாத பரப்பளவு உள்ளது. எட்டிப் பிடிக்க முடியாத உயரத்தில் இருப்பது. அந்த ஆகாயம் போன்ற நிறை செல்வத்தை அடைந்தான் விபீஷணன் என்பதை, 'அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்' என்ற சொல்லால் நம்மை உய்த்துணர வைக்கிறார் முனிவர். எனவே, 'இறைவனைச் சரணம் பற்றியவனே பெருஞ் செல்வன்' என்று உறுதிப்படுத்துகிறார் முனிபுங்கவர்.

கஜேந்திரன் என்ற யானை புனல் விளையாடக் கருதியது. மலர் நிறைந்த ஓர் மடுவில் இறங்கியது. அந்த நீர்நிலையில் வாழ்ந்த ஒரு முதலை யானையின் காலைக் கவ்வியது. யானை கரைக்கு இழுக்க, முதலை நீருக்குள் இழுக்க, நெடுங்காலம் கடும்போர் நிகழ்ந்தது.



முடிவில் யானை தன்னைக் காத்துக் கொள்ள முடியாத நிலையில் துதிக்கையில் ஓர் தாமரைமலரைத் தூக்கிப்பிடித்து, 'நாராயணா! ஓ மணிவண்ணா! நாகணை

பாவம் செய்யப் பயப்படு. புண்ணியத்தைத் தேடு. கண்ணனைப் பாடப் பழகு. பரமபதமான இறைவனின் திருவடியே அடைவதற்கு உரிய மிகவும் பெரிய பாக்கியம்.

—நடனகோபாலநாயகி சுவாமிகள்



யாய்! வாராய் என் ஆரிடரை நீக்காய்' என்று அலறியது. தன் உயிருக்கு மன்றாடிக்கொண்டிருக்கும் அந்த யானையை, 'ஸ து நாகவர: ஸ்ரீமாந்' என்று கூறுகிறார் பராசர பகவான். இது புராண ரத்தினம் எனத் திகழும் விஷ்ணுபுராணத்தில் உள்ளது.

கஜேந்திரன் மிருக இனத்தில் உதித்தவன்; மனிதனைப் போன்ற பகுத்தறிவு இல்லாதவன்; ஜீவ மரணப் போராட்டத்திலே சிக்கித் தவிப்பவன். உயிருக்கு ஆபத்து வந்த நிலையிலே உலகளந்த உத்தமனை உதவிக்கு அழைத்தான். ஆபத்துக் காலத்திலே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து யானைக்கு அருள் செய்தான் அச்சுதன்.

இவ்வாறு திருமாலைச் சரணடைந்த கஜேந்திரன் திருவுடைச் செல்வனானான்.

தினமும் பால் தயிர் நெய் விற்றுப் பிழைப்பவர் இடையர் குலத்தினர். ஆயர்பாடி என்பது அவர்கள் வசிக்கும் இடம். அந்தக் குலத்தில் உதித்த சிறுமியரை, 'சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!' என்று திருப்பாவையில் ஆண்டாள் அழைக்கிறாள்.

இடைக்குல மடப்பாவையர் யாதும் அறியாதவர்கள். இடக் கை எது, வலக் கை எது என்பதுகூடத் தெரியாதவர்கள். அவர்கள் குலம் மாடுமேய்த்து, மக்களுக்குப் பால் வழங்கும் சிறந்த குலம். அங்கு வந்து உதித்தான் செல்வத் திருமால்; ஆயர்குலத்தில் தோன்றிய அணி

விளக்கானுன். அவனேடு ஓடி, விளையாடி, உறவாடும் பெருஞ்செல்வம் பெற்றனர் ஆயர்குலச் சிறுமியர். ஒன்றும் அறியாதவர்களுக்குத் திருமாலருளால் என்றும் அழியாச் செல்வம் கிடைத்தது. ஆய்ப்பாடியிலுள்ள சிறுமியர் செல்வச் சிறுமியர் ஆனர்கள்.



நாம் மேலே பார்த்த பெரியோர் கண்ட செல்வர்கள் இவர்கள்.

இனி இவ்வுலகினர் கூறும் செல்வர்களைக் காண்போம்.

முற்பிறப்பில் ஒருவன் செய்த நல்வினைப் பயனுக இப் பிறப்பில் அடைந்திருக்கும் பொருட்செல்வத்தை உடையவனை 'ஸ்ரீமான், செல்வன்' என்பது உலக வழக்கு. இவர்களுக்குக் கிடைத்த செல்வம் கர்மத்தினடியாக வந்தது.

கர்மத்தினடியாகக் கிடைத்த செல்வர்களை 'ஸ்ரீமான், செல்வர்' என்பது சற்றும் பொருந்தாது.

ராமாயணத்திலும், விஷ்ணுபுராணத்திலும், திருப்பாவையிலும், ராமானுஜரும் கூறிய 'ஸ்ரீமான், செல்வர்' என்பது ஞானத்தினடியாக வந்தது.

கர்மத்தினடியாக வந்த செல்வம் அழிந்துவிடும். ஞானத்தினடியாக வந்த செல்வம் அழியாச் செல்வமாகும். அழிந்துபோகும் பொருட்செல்வத்தை விட அழியாத ஞானச் செல்வத்தை உடையவரையே, 'ஸ்ரீமான், செல்வர்' என்பது பொருந்தும்.

இவ்வாறு ஞானச் செல்வத்தை அடைவதற்குக் குலம் கோத்திரம் சாதி ஒன்றும் கிடையாது. எல்லா வகுப்பிலும் ஞானத்தால் உயர்ந்தவர்கள் உண்டு. இதனை மேலே காட்டிய சான்றுகள் விளக்கும்.

எனவே இவ்வுலகினர் 'ஸ்ரீமான், செல்வர்' எனக் கூறும் பொருட்செல்வம் உடையவரையும், வான்மீகி, பராசரர், ஆண்டாள், ராமானுஜர் முதலியவர்கள் கூறும் அருட்செல்வர்களையும் ஒப்பு நோக்கி, 'சிறந்த செல்வர் யார்?' என்பதை நாம் அனைவரும் உய்த்து உணர்வோமாக.

## விருந்தாளி



**வ**ருகிற விருந்தாளி வீட்டுக்காரனுக்குத் தெரியாதவனுக இருந்தாலும், தனக்கு வரவேற்புக் கிடைக்கும் என்ற நிச்சயத்துடன் வருகிறுன். அவ்விதம் வருபவனை வீட்டுக்கு உடையவன் தனக்கு உதவி செய்பவனுகக் கருதுகிறுனேயல்லாமல் தன் உதவியை அடைவதாகக் கருதுவதில்லை. இல்லறம் நடத்துபவர் தர்மத்தை அனுஷ்டிப்பதற்கு இந்த விருந்தாளி ஒரு வாய்ப்பைக் கொடுத்ததற்காக வீட்டுக்காரன் அவனுக்கு நன்றி செலுத்துகிறுன்.

—அன்னி பெசண்ட் அம்மையார்



# செய்திகள்

ஃ மணல்மேடு, ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றம் பிப்ரவரி 20-ஆம் நாள் விவேகானந்த ஜயந்தி விழாவைப் பெரிய அளவில் கொண்டாடியது. டாக்டர் சண்முகம் F.R.C.S. அவர்கள் அன்றைய தினம் காலையிலும் மாலையிலும் நடைபெற்ற பொதுக் கூட்டங்களுக்குத் தலைமை வகித்துச் சிறப்புரை நிகழ்த்தினர்.

விழாவில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த 38 பள்ளிகளிலிருந்து 68 மாணவ மாணவியர் பேச்சுப் போட்டிகளில் கலந்து கொண்டனர்.

மேல்நிலை வகுப்புகளுக்கு 'விவேகானந்தர் பாதையில் புதிய பாரதம்' என்ற தலைப்பிலும், உயர்நிலை வகுப்புக்களுக்கு 'விவேகானந்தரும் தேசபக்தியும்' என்ற தலைப்பிலும் பேச்சுப் போட்டிகள் நடத்தப்பெற்றன.

ஃ நாட்டறம்பள்ளி ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் சார்பாக ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி விழா திருப்பத்தூர் தர்மராஜா கோயிலில் நடைபெற்றது. நீதிபதி வி. சேதுராமன் தலைமையில், விவேகானந்த கேந்திராவைச் சேர்ந்த வி. ரங்கராஜன் உரையாற்றினர்.

ஃ உதகமண்டலம், ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் முழு உருவச் சலவைக்கல் விக்கிரகப் பிரதிஷ்டை நடைபெற இருக்கிறது. இது சம்பந்தமான விழா ஏப்ரல் 25, 26, 27 தேதிகளில் நடைபெற இருக்கிறது. பூஜ்ய ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்கள் மூன்று நாள் விழாவிலும் கலந்து கொள்கிறார்.

ஃ ராய்ப்பூர், ஸ்ரீராமகிருஷ்ண மடம் சமீபத்தில் 'ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த இளைஞர் மாநாடு' மூன்று நாட்களுக்கு நடத்தியது. இதில் 500 இளைஞர்கள் பங்கேற்றனர்.

ஃ குஜராத் புயல் நிவாரணப் பணிகளை ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் மேற்கொண்டு நடத்தி வருகிறது.

பவநகர், அம்ரேலி மாவட்டங்களில் 13 கிராமங்களைச் சேர்ந்த 1481 குடும்பங்களிடையே பின்வரும் பொருள்கள் சமீபத்தில் விநியோகிக்கப்பட்டன:—

பாஜ்ரா உணவு தானியம் 8663 கிலோ, அரிசி 4446 கிலோ, கோதுமை 1100 கிலோ, கடலைப் பருப்பு 4301 கிலோ, சர்க்கரை 608 கிலோ, தேயிலை 508 கிலோ, வெல்லம் 66 கிலோ, ஸ்வீட்ஸ் 66 கிலோ, பிஸ்கட் 5 கிலோ, பக்கெட்டுகள் 1419, பிளாஸ்டிக் டம்ளர்கள் 974, சமையல் பாத்திரம் 1062, சொம்பு 1070, கப் & ஸாசர் 363 செட்டுகள், உணவுத் தட்டுகள் 253, தண்ணீர்ப் பாத்திரம் 110, பெரிய டம்பளர் 110, புடைவைகள் 2635, ஆண்களுக்கான மேல்துண்டு 1359, லாங்க்ளாத் 1687, தாய்மார்களுக்கு உரிய ஜாக்கெட்கள் 1087, சிறுவர்களுக்கான துணி 6576, ஜமக்காளம் 836, உல்லன் பெட்ஷீட், மண்ணெண்ணெ ஸ்டவ் 83, ஆயில் எஞ்ஜின் & பம்பு செட் 1.

மேலும் பவநகர், அம்ரேலி மாவட்டங்களில் 45 கிராமங்களைச் சேர்ந்த 2709 குடும்பத்தினரிடையே பின்வரும் பொருள்கள் விநியோகிக்கப்பட்டதாகக் கடைசியாக வந்த செய்தி தெரிவிக்கிறது :—

உல்லன் போர்வை 3123, புடைவை 5305, ஆண்களுக்கான கனமான மேல்துண்டு 6623, தாய்மார்களுக்கு உரிய ஜாக்கெட் 1614, ஆண்களுக்கான சட்டை 879, அழுத்தமான உட்சட்டை (Jersegs) 3722, பாஜ்ரா & கோதுமை & அரிசி & பருப்பு முதலிய தானிய வகைகள் 27,600 கிலோ, சர்க்கரை 1967 கிலோ, தேயிலை 950, தட்டுகள் 2717, பக்கெட்டுகள் 2938, சொம்பு 2820,

ஃ நாட்டறம்பள்ளி மடத்தில் ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி விழாவையொட்டி மார்ச் 20 முதல் 26 தேதிவரை பொன்னுசாமி அடிகள் மகாபாரதப் பேருரைகள் நிகழ்த்தினர். மார்ச் 27-ஆம் நாள் பகல் வழக்கம்போல் அன்னதானம் இடம் பெற்றது. அன்று மாலை கீதா போதகர் நா. கிரிதாரி பிரசாத் சிறப்புரை ஆற்றினர்.

ஃ நாக்பூர், ஸ்ரீராமகிருஷ்ண மடம் நடத்திய ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த இளைஞர் மாநாட்டில் 285 இளைஞர்கள் கலந்து கொண்டனர்.

ஃ பெரியார் மாவட்டத்தைச் சேர்ந்த சீரகௌடநல்லி, விவேகானந்த பீடம் மலைவாழ் மக்களிடையேயும் அரிஜன சகோதரர்களிடையேயும் சத்சங்கம், கல்வி, மருத்துவம் ஆகிய பணிகளை நடத்தி வருகிறது. அதன் ஓர் அங்கமாக இப்போது ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயா துவக்கப்பெற்றது. துவக்க விழாவில் சுவாமி சோமானந்தர், தி. சு. அவினசிலிங்கம் ஆகியோர் கலந்துகொண்டனர்.

ஃ புவனேச்வரம், ஸ்ரீராமகிருஷ்ண மடம் நடத்திய ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த இளைஞர் மாநாட்டில் 135 இளைஞர்கள் கலந்து கொண்டனர். ☆

## சந்தாதாரர்கள் கவனிக்க

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் கடந்த 62 ஆண்டுகளாகத் தமிழ் அன்பர்களுக்கு உயர்ந்த, ஆன்மிக, வேதாந்தக் கருத்துக்களை அளிக்கும் பணியில் ஈடுபட்டு வந்துள்ளது. வாசகர்களுக்குக் குறைந்த பணச்செலவில் இந்தப் பத்திரிகையைக் கிடைக்கச் செய்ய ஸ்ரீராமகிருஷ்ண மடம் எப்போதும் முயன்று வந்திருக்கிறது.

ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்திற்கு ஆண்டுச் சந்தா ரூ. 12 என்பதும், தனிப்பிரதி ரூ. 1.20 என்பதும் ஐந்தாண்டுகளுக்கு முன்பு நிர்ணயிக்கப்பட்ட விலையாகும். இதற்கிடைப்பட்ட காலத்தில் இதர பல பத்திரிகைகள் இரண்டு மூன்று முறை தங்கள் விலையை உயர்த்தின என்பது அன்பர்களின் கவனத்திற்குரியது.

மற்றப் பத்திரிகைகள் தங்களுடைய விலையை உயர்த்தியபோதிலும், சிரமத்துடன் பொதுமக்களின் நலனை முன்னிட்டுச் சந்தாவை உயர்த்தாமல் இருப்பது விஜயத்தின் வழக்கமாக ஆரம்ப காலத்திலிருந்து இருந்து வந்துள்ளது.

சமீபத்தில் ஏற்பட்ட தபால் கட்டண உயர்வு, காகித விலை உயர்வு, அச்சுச் செலவு போன்ற செலவுகளை முன்னிட்டு, தவிர்க்க இயலாத காரணத்தினல் ஆண்டுச் சந்தாவையும் தனிப்பிரதி விலையையும் உயர்த்தி ஆகவேண்டிய கட்டாயம் இப்போது ஏற்பட்டிருப்பதை மிகவும் மனவருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஏற்கனவே ரூ. 12 செலுத்திப் பத்திரிகையைப் பெற்று வரும் பழைய சந்தாதாரர்கள் இனித் தாங்கள் பெற வேண்டிய பிரதி ஒன்றுக்கு 25 காசு என்று கணக்கிட்டு மணியார்டர் அல்லது போஸ்டல் ஆர்டர் மூலம் பணம் அனுப்பக் கோருகிறோம். உதாரணமாக, ஓர் ஆண்டுக்குச் சந்தா செலுத்தியவர் நான்கு இதழ்களை ஏற்கனவே பெற்று, இனி எட்டு இதழ்களைப் பெறவேண்டியிருப்பின் ரூ. 2 கூடுதலாக அனுப்பவும்.

ரூ. 12 செலுத்திய புதிய சந்தாதாரர்கள் அனைவரும் ரூ. 3 கூடுதலாக அனுப்பி உதவ வேண்டுகிறோம்.

ஆயுள் சந்தாத் தொகையையும் கூடிய விரைவில் உயர்த்த வேண்டியிருக்கும். அதுபற்றி முடிவு செய்ததும் விஜயத்தில் தகவல் அறிவிக்கப்படும்.

அருள்நெறிக் கதை:

# லட்சுமணனுக்கு ஒரு சோதனை



மைதிலி வேணுகோபால்

தென்கோடியில் தன் பக்தனுக்குத் தரிசனமளித்து அருள்புரிந்து விட்டுப் பார்வதியும் பரமசிவனும் ஆகாய மார்க்கமாகக் கயிலை திரும்பிக் கொண்டிருந்தனர். பகவான் தன் சங்கல்பத்தாலேயே பக்தனுக்கு அருள்புரிந்துவிட முடியும். ஆனால் பக்தனோ பகவான் நேரே வந்து தனக்குத் தரிசனம் அளிப்பதையே விரும்புகிறான். ஆதலால் ஒவ்வொரு முறையும் பார்வதியும் பரமேச்வரனும் நேரே செல்ல வேண்டியிருக்கிறது.



பார்வதி, ''பெருமானே! இது என்ன இடம்? ஓர் அழகிய சிறிய பர்ணசாலை வேறு இருக்கிறதே!'' என்று தண்டகாரண்யத்திலே, வாழைத் தோட்டங்களுக்கு மத்தியில் இருந்த ஓர் இடத்தைப் பார்த்துப் பரமசிவனிடம் கேட்டாள்.

''ஓ, இதுவா! இதுதான் ராமபிரானின் பர்ணசாலை. தந்தையின் சொற்படி இப்போது ராமன் சீதையுடனும் லட்சமணனுடனும் வனவாசம் வந்திருக்கிறாரே, தேவி!'' என்று பரமேசுவரன் பதில் கூறினார்.

திடீரென்று பார்வதி, ஏதோ தீனமான சப்தத்தைக் கேட்டுப் பயந்து, ''சுவாமி, கொஞ்சம் கீழே இறங்கிப் பார்க்கலாமா? யாரோ ஒரு பெண் அவலமாக அழுது புலம்புவது போல் கேட்கிறதே!'' என்று பரிதவித்தாள்.

''தேவி! வேறொன்றுமில்லை. எல்லாம் தேவகாரியம். சங்கற்பப்படியேதான் நடக்கிறது. வா, போகலாம்'' என்று அவளைச் சமாதானப் படுத்தினார் பரமன்.

''இல்லை இல்லை, எதுவாயினும் ஓர் அபலைப் பெண்ணைக் காப்பாற்றுவது என் கடமை, நாம் இறங்கத்தான் வேண்டும்'' என்று பார்வதி பிடிவாதம் பிடிக்கவே, வேறு வழியின்றி இருவரும் மரங்கள் அடர்ந்த இடமாகப் பார்த்து இறங்கினார்கள்.

சிவபெருமான், ''தேவி! நான் மரத்தின் அருகில் காத்திருக்கிறேன். நீ சீக்கிரமாகவே வந்துவிடு'' என்றார்.

தேவி யோசித்தாள். இப்படியே போனால் நன்றாக இருக்காது என்று நினைத்து ஒரு பெண்கிளியின் உருவத்தை எடுத்துக்கொண்டு போனாள்.

* * *

ஆச்ரமம் மிகவும் எளிமையாகவும் தூய்மையாகவும் இருந்தது. ஆனால் நிலைமைதான் சரியாக இல்லை. அழகே வடிவெடுத்த ஒரு பெண் அங்கே அழுது புலம்பிக்கொண்டிருந்தாள். தவக் கோலம் பூண்ட ஓர் இளைஞன், கையில் வில்லையும் அம்பையும் வைத்துக்கொண்டு அவளுக்கு ஏதோ பதில் சொல்லிச் சமாதானப் படுத்திக்கொண்டிருந்தான்.



''அரக்கர்களிடம் உன் அண்ணன் சிக்கிக் கொண்டு, 'ஹே லட்சுமணா! ஹே சீதே!' என்று கதறியதைக் கேட்டும் இப்படி நின்றுகொண்டிருக்கிறாயே! இது நியாயமா? ஓடிப்போய் அவரைக் காப்பாற்று'' என்று அந்தப் பெண் கதறினாள்.

அசுரர்களின் மோசங்களையும் சூதையும் அறிந்த லட்சுமணன், அண்ணனின் ஆணையை நினைவில் கொண்டு பேசாமலே இருந்தான்.

''ஓ! இப்பொழுது புரிகிறது, லட்சுமணா! அண்ணன் இறந்ததும் என்னை அடையலாம் என்று மனப்பால் குடிக்காதே! இதற்காகத்தான் இத்தனை நாள் காத்திருந்தாயா?'' என்றாள் சீதை.

பரம பக்தனான லட்சுமணன் தன் காதுகளை மூடிக்கொண்டான். அவனுக்கு இதயமே வலித்தது. தீயினாலாவது இந்தச் சீதை லட்சுமணனைச் சுட்டிருக்கலாம்! இப்படி நாவினால் சுடுகிறாளே!

ஒரு நொடியில் விஷயத்தைப் புரிந்துகொண்ட கிளி (பார்வதி) பேசிற்று—

**கிளி**—அயோத்தி அரசனின் மகனா நீ? அந்தப் பெண் கணவனை விட்டுப் பிரிந்திருக்கிறாள். தன் கணவனுக்கு ஏதோ ஆபத்து என்று கதறுகிறாளே! உனக்கு இரக்கமாக இல்லையா? அவன் உன் அண்ணன் தானே அப்பா? அவனைக் காப்பாற்றப் போகாமல் உனக்கு இப்போது இவளிடத்தில் என்னப்பா பேச்சு வேண்டியிருக்கிறது? இவளை வஞ்சித்துவிடாதே! உனக்குப் புண்ணியமாகப் போகட்டும்.

**லட்சுமணன்**—தங்களை யார் என்று அறிந்துகொண்டேன். மகேச்வரனின் பத்தினியான தாங்கள் பெண்கிளியின் வேஷம் தரித்து வந்திருக்கிறீர்கள்; எதற்காகவோ?

**கிளி**—உன்னுடைய உண்மையான நோக்கத்தை அறிந்துகொள்ளவும், இந்தப் பெண்ணுக்கு உதவி செய்யவுமே வந்திருக்கிறேன்.

**லட்சுமணன்**—என் உண்மையான நோக்கம், என் தாயார் போன்ற இவளைக் காப்பாற்றுவதும் என் தந்தை போன்ற ராமனுக்குக் கைங்கர்யங்கள் செய்வதும்தான். வேறு எதுவுமே அல்ல. இவளை நான் வஞ்சித்துவிடுவேனோ என்று நீங்கள் சந்தேகப்படுவது என்னுடைய துர்ப்பாக்கியம்தான்.

**கிளி**—நெருப்புத் தணல் போன்ற பெண்களின் அருகில், நெய்க் குடம் போன்ற ஆண்கள் இருந்தால், நெய் உருகத்தானே செய்யும்?

யுவதியின் அருகில் இருக்கும்போது எந்தப் புருஷனின் மனமும் பேதலிக்கும் இல்லையா?

**லட்சுமணன்**—அம்மா! என் தாயும் தந்தையும் மிகவும் பரிசுத்த மானவர்கள். அப்படிப்பட்டவர்களின் பிள்ளையான நானும் பரிசுத்த மானவன்தான். அக்கிரமத்தை நான் ஒரு நாளும் செய்யமாட்டேன். என் தந்தை, சொன்ன வார்த்தைக்காகத் தம் உயிரையே கொடுத் தவர். என் தாயோ, அவளை நினைத்தாலே உடல் புல்லரிக்கிறது. என் தாய் மகாஞானி. அவர்களின் பிள்ளை நான்.

**கிளி**—நல்ல மணமும் அழகும் உள்ள, அன்றலர்ந்த மலரைக் கண்டால் என்ன தோன்றும்? இதைச் சூட்டிக்கொள்ளலாமே என்று தானே? ஒரு புஷ்டியான, இனிப்பான பழத்தைக் கண்டதுமே, உண் ணத் தோன்றுகிறதல்லவா? அதைப் போலத்தான்....

**லட்சுமணன்**—மதம் பிடித்த யானை போல மனம் தறிகெட்டு ஓடினாலும்கூட, அங்குசத்தை வைத்து யானைப்பாகன் அதை அடக்கி யாள்வது போல், பகுத்தறிவு என்ற அங்குசத்தை நான் வைத்துக் கொண்டிருக்கிறேனே, எதற்கு? என்னுடைய பகுத்தறிவுக்கு வேலையே இருக்காதம்மா. ஏனெனில், தீய விஷயம் என் மனதில் புகவே புகாது.

**கிளி**—விச்வாமித்ரரைவிட யாரப்பா ஞானி? அவரே என்ன செய்தார்? மேனகையைக் கண்டதும் தவத்தை விட்டுத் தமஸ்ஸில் விழுந்தாரே! மனதை அடக்க வேண்டிய முனிவர்களுக்கே அது கடுமை யான காரியமன்றோ!

**லட்சுமணன்**—யமலோகத்தில் படப்போகிற பாட்டை எண் ணினாலே, 'போதுமடா! இந்தப் பெண்ணினால் பெருந்தொல்லைகள். வேண்டாம், இந்தக் கஷ்டம்' என்று எங்கேயேனும் ஓடிவிடலாம்.

**கிளி**—என்றைக்கோ காலமாகி என்றைக் கோ யமலோகம் போனால், இன்றைக்கா அதைச் சிந்தித்துப் பார்க்கின்றனர்? ஒரு பெண் தனியாக இருக்கிறாள் என்றால், அந்த மனம் எப்படி வேண்டுமானாலும் செயற்படும். விவாதம் செய்து சோதித்து அனுப்பிய ஆனைப்பட்ட சந்திரனே என்ன காரியம் செய்துவிட்டான்! தெரியு மல்லவா?



**லட்சுமணன்**—நீங்கள் நெறி தவறியவர் களையே உதாரணம் காட்டுகிறீர்கள். தர்மத்துக்கும் சத்தியத்துக்கும் கட்டுப்பட்ட ருக்மாங்கதனைப்பற்றி நினைத்துப் பார்க்கலாமே. மேலும், தனியாக இருக்கிறோம் என்று எப்படிச் சொல்ல முடியும்? எல்லா வற்றுக்கும் அந்தர்யாமியான பகவான் உள்ளத்திலேயே குடிகொண் டிருக்கிறார். நாம் செய்யும் செயல்கள் எல்லாவற்றையும் அவர் பார்த்துக்கொண்டேதானே இருக்கிறார்? இதை உணர்ந்த தர்ம வானின் மனம் சபலமடையாது, அம்மா!

**கிளி**—இந்திரன் விஷயம் தெரியாதா? இந்திரன் கெட்டதும் பெண்ணாலே, சந்திரன் கெட்டதும் பெண்ணாலேயன்றோ?

லட்சுமணன்—ஏனம்மா, பெண்ணுல் கெட்டுத்தான் போக வேண்டுமா என்ன? எல்லாரையும் தாய் என்ற மனேபாவத்துடன் பார்க்கப் பழகிக்கொண்டால், தொல்லேயே இருக்காதே! துருவனேத் தேவதைகள் என்ன செய்ய முடிந்தது?

கிளி—அந்தத் தேவதைகள் சிறிது நேரத்திற்காக வந்த தேவதைகள். அநேக காலமாக ஒரு பெண்ணேச் சமீபத்தில் வைத்துக் கொண்டிருந்தால் எப்படிப்பட்டவனின் மனமும் சபலப்பட்டுத் தானுகும்.

லட்சுமணன்—அப்படியொன்றும் அவசியமில்லே. சீதாபிராட்டி. என் தாய். நான் இவளது மகன். இவளது உடலேயும் ஒழுக்கத்தையும் சீலத்தையும் கற்பையும் காப்பது என் தலேயாய கடமை என்று, எந்தப் பெண்ணேப் பார்த்தாலும் உறுதி எடுத்துக்கொள்ள வேண்டும். மற்றவர்களிடமிருந்து மட்டுமின்றி, தன்னிடமிருந்தும் அவளேக் காப்பாற்ற வேண்டும். உண்மையை இப்போது விளக்குகிறேன். ஸ்ரீராமர் வேறு யாருமல்ல. சாட்சாத் ஸ்ரீமந் நாராயணனேதான் அவர். சீதையான இவள் சாட்சாத் பெரிய பிராட்டியாரேதான். அடியேன் ஆதிசேஷன். இவர்கள் இருவருக்கும் தொண்டு புரிவதற்காகவே நான் வந்திருக்கிறேன். சீதை வேறு யார்? என் தாய். தங்களே எப்படித் தங்கள் பக்தர்கள் தாயாய், தெய்வமாய் வணங்குகிருர்களோ அது போலவே நான் சீதையை என் தாயாகவே வணங்குகிறேன். இன்னுமா என்மீது சந்தேகப்படுகிறீர்கள்?



கிளி—உன்னேப்பற்றி எனக்குத் தெரியாதா? என்மீது கோபப்படாதே. உலகத்திற்கு உன் உயர்ந்த குணத்தை எடுத்துக் காட்டவே இவ்விதம் பேசினேன். என்னே மன்னித்துக்கொள். பரிசுத்தமான பிரம்மசாரியே நீ; எப்போதும் நீ பிரம்மத்துடன் இருப்பவன். உனக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும். உன் அருமை பெருமைகளே எடுத்தியம்ப யாரால் முடியும்? பரம பவித்திரனுன உன்னே ஆசீர்வதிக்கிறேன். சென்று வருகிறேன்.

பார்வதி லட்சுமணனே ஆசீர்வதித்து விட்டு அங்கிருந்து சென்ருள்.

* * *

விழிகளிலே பெருகிய நீரைச் சுண்டிவிடுகிருள் பார்வதி. அதைக் கண்டு பரமசிவன் பதைபதைக்கிருர்.

''ஒன்றுமில்லே நாதா! ஒரு பரிசுத்தமான, உத்தமமான, குற்றமே இல்லாத, கைங்கர்ய சிகாமணியாக விளங்கும் லட்சுமணனேக் கண்டேன். குற்றமே இல்லாத அந்த ஆத்மாவைக் கண்டதில் ஆனந்தக் கண்ணீர் விடுகிறேன்'' என்ருள்.

இருவரும் கயிலேயை நோக்கிப் புறப்பட்டனர். நிம்மதியாகவும் திருப்தியாகவும் கயிலாயம் சென்றடைந்தனர். ★